Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Pow
Press, Mount Road, Madras.—*Editor:* C. R. Srinivasan, B. A.






IMPORTANT TO MOTHERS
Nº 99
WOODWARDS CELEBRATED
"GRIPE WATER"
AN
INFANTS PRESERVATIVE
FOR THE DISORDERS OF CHILDREN, VIZ.
REGISTERED TRADE MARK "GRIPE WATER"

ஸ்ரீ தேசபக்தன்

வாரப்பதிப்பு

சுபானுஸு ஆவணிமீ 13உ (29-8-'43)

# வந்தே விட்டது!

பொழுது விடிந்தால் கையில் கூடைகளுடன் அரிசிக் கடைகள் முன்பாக மல் யுத்தம் பழகி வந்த சென்னை வாஸிகள் பலர்; இவ்விடங்களில் எல்லாம் தேகவலியுள்ளவர்களே அநேகமாக வெற்றியுடன் திரும்புவர். மற்றவர்கள் முகத்தில் ஈயாடாமல் ஏமாற்றத்துடன் வீடு திரும்ப நேரும். அரிசி பெற்றவர்கள் முகத்தில் அலாதியான ஒரு ஜோதி! வாங்கிய சரக்கின் தரத்தினால் அல்ல! எப்படியாவது அரிசி கிடைத்ததே என்ற ஆனந்தத்தால்! நகரின் நாலு பக்கங்களிலும் கண்ட காட்சி இதுவேதான். கடைசியாக வருகிறது வருகிறது என்று சொல்லி வந்த அரிசிப் பங்கீடு சென்னைக்கு வந்தே விட்டது. சென்ற வாரத்தில் சர்க்கார் திட்டத்தின்படி சென்னை வாஸிகளுக்கு பங்கீடு கார்டுகள் வழங்கப்பட்டன. நகரில் லட்சத்து எண்பத்தி ஆராயிரம் குடும்பங்கள் வாழ்கின்றனவென்பது சர்க்கார் எடுத்திருக்கும் கணக்கு. இவர்களுக்கெல்லாம் இக்கார்டுகள் கொடுக்கப்பட்டுள்ளன. 2-வயது முதல் 12-வயதுள்ளோருக்கு தினசரி 1¼ ஆழாக்கு அரிசி கிடைக்கும். 12 வயதுக்கு மேற்பட்ட ஒவ்வொருவருக்கும் அன்ருடம் 2½ ஆழாக்கு தருவார்களாம். இந்த விநியோகப்படி பார்த்தால் மாதம் சென்னைக்கு சுமார் 10 ஆயிரம் டன் அரிசி வேண்டியிருக்குமென்று சர்க்கார் உத்தேசமாகப் புள்ளி போட்டிருக்கின்றனர். எங்கெங்கு ஜனங்கள் போய் அரிசியை வாங்கிக் கொள்ள வேண்டும்; அதைப் பெறுவதற்கான முறைகள் எவை என்பதைப்பற்றியெல்லாம் சர்க்கார் விரிவாக தகவல்கள் கொடுத்திருக்கின்றனர். அனுஷ்டானத்தில் இத் திட்டம் எவ்வளவுதூரம் வெற்றிகரமாகவிருக்கும், என்பதை முற்கூட்டி நிதானிப்பது சிரமம். இதில் அன்ருடம் எழக்கூடிய பிரச்னைகள் அநேகமிருக்கும். எனவே இவற்றை அனுபவத்தை அனுசரித்தே சமாளிக்க வேண்டும்.

தீர்க்க திருஷ்டியுடனும், சிந்தனா சக்தியோடும் காலா காலத்தில் நிலைமையைச் சமாளிக்கப் போதிய திட்டங்களில்லாததால் வங்க மாகாணத்திலும் இன்னும் ஏனைய பாகங்களிலும் மக்கள் படுந்துன்பம் கொஞ்ச நஞ்சமில்லை. உணவுக்காகத் திரிந்து காத்திருந்து கல்கத்தாவிலே அநேகர் துஞ்சும்படியான நிலையும் ஏற்பட்டு விட்டது. உணவுக் கஷ்டத்தால் உயிர்விட்டவர்களின் தொகையோ பெருகி வருகிறது. இந்த நிலையைச் சென்னை சர்க்கார் ஓர் படிப்பினையாகக் கொள்ள வேண்டும்.

சென்னை சர்க்கார் பங்கீடு திட்டத்தை அமுல் நடத்த முற்படுவதால் சப்ளை செய்யும் சரக்கின் தரம் சம்பந்தமாகவும் அதிக கவனம் செலுத்த வேண்டும். இல்லையேல் மக்களின் தேக நிலை சீர்கெட்டு பலவிதமான நோய்கள் பரவி சிக்கல்கள் மிகுந்து விடும். ஆதலால், தலைவலியை போக்குவதாக நினைத்து திருகுவலியை அழைக்காமல் பார்த்துக் கொள்வதவசியம்.

---

# வாழ்க திரு. வி. க.

தமிழன்னையின் தவப்புதல்வர்களில் ஒருவரான ஸ்ரீ திரு. வி. கல்யாணசுந்தர முதலியாரின் ஷஷ்டிஅப்த பூர்த்தி கொண்டாடப்படுகிறது. 'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' என்பதை உணர்ந்து அதைத் தாம் தொழுது படித்து வணங்கியதுடனின்றி மற்றவர்களையும் தட்டியெழுப்பி தலைவணங்கச் செய்த பெருமை ஸ்ரீ திரு. வி. க. வைச் சார்ந்ததாகும். எனவே தமிழர்கள் அவரது ஷஷ்டிஅப்த பூர்த்தியைக் கொண்டாடி அவரது சேவை இன்னும் நெடுநாளைக்கும் நீடிக்க வேண்டுமென்று பிரார்த்திப்பது இயற்கை; மிகவும் பொருத்தமான காரியம்.

ஸ்ரீ திரு. வி. க. பலதுறைகளில் சேவை புரிந்தார். அவற்றை எல்லாம் புகழ்ந்து வரைந்திருக்கும் பிரமுகர்களின் கட்டுரைகள் இவ்விதழில் தோன்றுகின்றன. ஸ்ரீ முதலியார் நாட்டுக்காகவும், தமிழ்பாஷைக்காகவும் செய்த தொண்டு மிகவும் மதிப்பு வாய்ந்தது. அரசியல் அரங்கத்திலே அவர் ஆற்றிய சேவைக்கான பலன் இன்னும் கை கூடவில்லை; ஆனால் அதே சேவையின் மூலம் மற்றொரு அருமையான பலன் கைகூடியிருக்கிறது. மக்களின் உணர்ச்சியை ராஜீய

—அடுத்த பக்கம்

# சென்ற வார நிகழ்ச்சிகள்

### சர்ச்சில், ரூஸ்வெல்ட்டிற்கு கல்கத்தா மேயர் தந்தி

வின்ஸ்டன் சர்ச்சிலுக்கும் ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டிற்கும், கல்கத்தா மேயர் பின்வருமாறு தந்தி அனுப்பியுள்ளார்:—

"உணவுப் பொருள் குறைவால் கல்கத்தா நகரிலும் வங்காளத்திலும் பெரும் நெருக்கடி நிலவுகிறது. ஜனங்கள் சக்தியிழந்து பட்டினியால் மடிகின்றனர். பட்டினி கிடக்கும் மக்கள் சார்பாக, அமெரிக்கா, ஆஸ்திரேலியா, முதலிய பாகங்களிலிருந்தும் உடனே கப்பல்களில் உணவுப் பொருள் அனுப்புமாறு வேண்டுகிறேன்"

* * * * *

### ஐரோப்பிய ஐ. ஸி. எஸ். ராஜிநாமா

இந்தியன் ஸிவில் சர்விஸிலிருந்து வங்க சர்க்கார் பிரதம காரியதரிசி மிஸ்டர் ஜே. பி. பிளேர், ஐ.ஸி.எஸ். ராஜினாமா செய்திருப்பதாக 'ஹிதவாதா' பத்திரிகைச் செய்தி கூறுகிறது. அவர் 1914 டிசம்பர் 18-ந் தேதி இந்தியா வந்து சேர்ந்தார். 1944-ம் வருடம் டிசம்பரில் அவர் பதவியிலிருந்து விலக வேண்டும். அவர் தாம் முன்னதாக விலகுவதென தீர்மானித்து விட்டார்.

சொந்தக் கடிதப் போக்குவரத்து தண்'க்கை செய்யப்படுவதால், பதவியிலிருந்து சென்ற சில மாதங்களில் இந்த சர்விஸிலிருந்து விலகிய இரண்டாமவர் இவராகும். முதலாமவர் பஞ்சாப், மிஸ்டர் மூன்.

மிஸ்டர் பிளேர் இங்கிலாந்திலுள்ள தமது உறவினருக்கு வங்க நிர்வாகத்தை பற்றிச் சில விவரங்களைக் குறிப்பிட்டிருந்ததாகவும், வெளிநாடுகளுக்கு அனுப்பப்படும் கடிதங்கள் தணிக்கை செய்யப்படுவதால் இவர் கடிதத்திலடங்கிய குறிப்பு உயர்தர அதிகாரிகளின் கவனத்திற்குக்கொண்டு வரப்பட்டதாகவும், அதை யொட்டியே அவரது ராஜினாமா ஏற்பட்டதாகவும் மேலும் அச்செய்தி கூறுகிறது.

* * * *

### ஜவுளி விலைக் கட்டுப்பாடு

பருத்தி ஜவுளிகள், நூல் இவற்றின் அதிகப்பக்ஷ விலைகளை இந்திய சர்க்கார் நிர்ணயித்திருப்பதாக ஜவுளிக் கமிஷனர் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். காரிக்கம் சலவை செய்யப்பட்ட பருத்தி துணிகளில் 12 ஸ்டாண்டர்ட் தினுசுகளுக்கும், 4 வகைப் பருத்தி நூலுக்கும் அதிகப்பக்ஷ விலைகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. ஜவுளிக் கமிஷனர் இது பற்றி ஓர் அறிக்கை விடுத்தார்.

நிர்ணயிக்கப்பட்ட விலைகள் மில்லுகளில்டெலிவரி எடுத்துக் கொள்ளுவதற்கான அதிகப் பக்ஷ விலைகள். சில்லரை வியாபாரத்தில் இந்தியா பூராவும் இதே விலைக்கும் இதர ரகங்களானால் இவற்றிற்கொத்த விலைகளுக்குமே விற்கப்படுமென்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்தியா பூராவும் ஒரே மாதிரியான அதிகப் பக்ஷ விலைகள்தான். ரயில்வேக் கட்டணம் முதலிய சார்ஜுகள் நீங்கலான அதிகப் பக்ஷ விலைகளைக் காட்டிலும் 100-க்கு 15 வீதத்துக்குமேல் லாபம் வைத்துக்கொள்ளக்கூடாது. ரயில்வேக் கட்டணம் முதலிய சார்ஜுகள் 5 சத விகிதத்துக்கு மேல் இரா; அல்லது மொத்தம் 20 சத விகிதத்துக்கு மேல் லாபம் இருக்கக்கூடாது. ஆகவே மேற்படி விலைகளுடன் 20 சத விகிதம் சேர்ந்து பொது மக்கள் தங்கள் ஸப்ளைகளை வாங்கிக்கொள்ள முடியும்.

1943-ஆகஸ்டிலும், அதற்குப் பிறகும் டெலிவரி ஆவதற்காக முன்னமேயே காண்டிராக்ட் செய்யப்பட்ட சரக்குகளில் டெலிவரி ஆகாதவை சம்பந்தமாக ஒரு ஏற்பாடு ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. அதாவது இந்த அறிக்கை வெளியாகும் தேதிக்குப் பிறகு ஏற்படும் எல்லா டெலிவரிகளின் விலைகளும் மேற்குறிப்பிட்ட அதிகப்பக்ஷ விலைகளுக்குக் குறைக்கப்படும். மில்லுகளிலிருந்து இந்தச் சலுகைகளைப் பெறும் வியாபாரிகள் அவற்றைச் சரக்குகளை வாங்குவோருக்கு மாற்றுவரென்று போர்டார் உறுதி கூற ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். எனவே உபயோகிப்பவர்களுக்கு ஸப்ளைகள் உடனே மேற்படி விலைக்குக் கிடைக்க வேண்டும்.

ஆகஸ்ட் 31-ந் தேதி அன்று வியாபாரிகளிடம் விற்பனையாகாத சரக்குகள் இருக்கக்கூடும். இத்தகைய துணிகளும், நூலும் சரிவர மார்க்கெட் ஆவதற்கு உதவுவதற்காக ஆகஸ்ட் 31-ந் தேதி விற்பனையாகாமல் கிடக்கும் மார்க் செய்யப்படாத மில் பேல்களில் அடங்கியுள்ள எல்லாச் சரக்குகளையும் சர்க்கார் வாங்கிவிடுவரென்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

---

(முன் பக்கத்தொடர்ச்சி)

விஷயங்களில் திருப்புவதற்குத் தமிழ் பாஷை எவ்வளவு தூரம் உதவி செய்யக்கூடும் என்பதை அனுபவத்தில் நிரூபித்துக் காட்டிய 'நிகரற்ற தமிழ் நாவலர்' ஸ்ரீ திரு. வி. க. தான். அவர் செய்த சேவை காரணமாக இன்று தமிழ் மொழி வளர்ந்து செழித்துக் கொழிக்கிறது. தமிழ்மணம் பாரெங்கும் வீசச் செய்த தம் முயற்சியின் பயனை ஸ்ரீ முதலியார் தமது 60-வது வயது பூர்த்தியின் போது கண்கூடாகக் கண்டுகளிக்கிறார். 'தான் வருந்திப் பிறர்க்கு உதவும்' தியாக உணர்ச்சியுடன் கூடிய ஸ்ரீ திரு. வி. க. திடகாத்திரமாக நீடூழி வாழ இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.




## ரூஸ்வெல்ட் சர்ச்சில் கூட்டறிக்கை

கியுபக் மகாநாடு முடிந்து விட்டது. சர்ச்சிலும்-ரூஸ்வெல்டும் ஒரு கூட்டறிக்கை விடுத்திருக்கின்றனர். உலகிலுள்ள எல்லா அரங்கங்களைப்பற்றியும் ஆலோசனை நடந்ததாம். தேவையான முடிவுகள் செய்யப்பட்டதாகவும், அவற்றை யொட்டி போர் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படுமென்றும் அறிக்கை கூறுகிறது. அவை யாவையென்பது அப்போராட்டங்கள் துவங்கும் போதுதான் தெரிய வரும். எனினும் ஜப்பானுடன் தீவிரப் போர் நடத்துவது பற்றியே பெரிதும் விவாதம் நடந்ததென அறிவிக்கப்படுகிறது. இதை அப்படியே உண்மையென நாம் நம்பிவிடுவதா, அல்லது இது எதிரிகளை ஏமாற்றத்தானுவென்று நாம் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. ஜப்பானை வீழ்த்துவதையே முதல் வேலையாகக் கொள்ள வேண்டுமென்ற உணர்ச்சி அமெரிக்காவில் வலுத்து வருவது கண்கூடு. அத்தகையோரைத் திருப்தி செய்வதும் இவ்வறிக்கையின் நோக்கமாயிருக்கலாம். எப்படியும் சீனுவுக்கு இனி அதிக உதவியனுப்ப ஏற்பாடு செய்யப்படுமென்பதில் சந்தேகமில்லை. சீன அந்நிய நாட்டு மந்திரியான டாக்டர் ஸூங்கும் கியுபக் விவாதத்தில் கலந்துகொண்டது குறிப்பிடத்தக்கது. ஆனுல் சீனுவிலிருந்து ஜப்பான் மீது பெருவாரியான தாக்குதல் துவக்க சீனருக்கு ஏராளமான ஆயுதங்கள் போய்ச்சேர்ந்தாக வேண்டும். பர்மாவை மீட்கும்வரை அது சாத்தியமில்லை. நேச அதிகாரிகள் அதை உணர்ந்திருப்பது நிச்சயம். அதற்கான ராணுவ முஸ்தீப்பு மும்மரமாக நடந்து வருவதும் அனைவரும் அறிந்தது தான். எனினும் ராணுவ சன்னத்தங்கள் மட்டும் போதுமா? பர்மா, இந்தியா இருதேச மக்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பும் அத்தியாவசியம். பர்மாவுக்குப் பரிபூர்ண சுதந்திரம் அளித்துவிட்டதாக ஜப்பானியர் முழக்குவதில் அர்த்தமில்லாமலில்லை. அவர்களைவிட தங்கள் வார்த்தை அதிக நம்பிக்கைக்குரியதெனப் பிரிட்டிஷார் நிரூபிக்கமுடியும். இதற்கு இந்தியாவின் சுதந்திர உரிமைமையை அவர்கள் ஒப்புக்கொள்வது மட்டும் போதாது. அதற்கனுகுணமான நடவடிக்கைகளையும் உடனே எடுத்துக் கொள்ள வேண்டும்.

### லிட்வினுப் வாபிஸ்

வாஷிங்டனில் ரஷ்ய ஸ்தானீகராக இருந்த மிஸ்டர் லிட்வினுவை ரஷ்ய சர்க்கார் திரும்பவழைத்து விட்டனர். அவருக்குப் பதிலாக அந்த ஸ்தானீகர் காரியாலயத்தைச் சேர்ந்த ஒரு சில்லரை அதிகாரி நியமிக்கப்பட்டிருக்கிருர். இது ரஷ்ய சர்க்காரின் அதிருப்தியைக் குறிப்பிடுவதாகப் பலர் எண்ணுகின்றனர். சமீபத்தில் லண்டனிலிருந்த ரஷ்ய ஸ்தானீகரான மிஸ்டர் மெய்ஸ்கியும் மாஸ்கோவுக்குத் திரும்ப வழைக்கப்பட்டார். கியுபக் மகாநாட்டிற்கு பிறகு வாஷிங்டனிலுள்ள ரஷ்ய ஸ்தானீகர் மாற்றம் ஏற்பட்டிருப்பதால் கியுபக்கில் அமைந்த திட்டமும் ரஷ்யருக்குத் திருப்தியளிக்கவில்லையோ வெனத் தோன்றுகிறது. ரஷ்யர் விசேஷ வீரத்துடன் முன்னேறித் தாக்கி நாஸிகளை வதைத்து வருகின்றனர். கார்காவையும் திரும்பக் கைப்பற்றிவிட்டார்கள். எனினும் ரஷ்ய முனையிலுள்ள அச்சுப் படைகளில் பெரும் பாகம் வேறு முனை செல்லுமாறு உடனே நடவடிக்கை எடுக்க வேண்டுமென ரஷ்யர் மற்ற நேச நாடுகளை வற்புறுத்தி வருகிருர்கள். ஸிஸிலிப் போராட்டம் தீர்ந்து விட்டது. அடுத்தபடியாக நேசப் படைகள் பாய்வது இத்தாலி மீதா, மேற்கு ஐரோப்பாவிலா, அல்லது பால்கன் பிரதேசத்திலா என்பது தெரிய வேண்டும்.

### சர்ச்சில் காரியாலயம் மீது குண்டு வீச்சு

1940-ம் ஆண்டு நவம்பர் மாதம் லண்டனை ஜெர்மன் விமானங்கள் தாக்கியபோது ஒரு குண்டு பொக்கிஷ இலாகா காரியாலயத்தில் விழுந்ததாம். இதனுல் 12 பேர்கள் கொல்லப்பட்டனராம். டௌனிங் தெரு 10-வது நம்பர் மாளிகையில் (சர்ச்சில் காரியாலயம்) சாப்பாட்டு ஹாலில் ஒரு பெரிய விளக்கு மேஜைமீது விழுந்தது. அப்பொழுது அங்கு சர்ச்சிலும் மற்றும் சிலரும் விருந்துண்டு கொண்டிருந்தனர். பதுங்கி கொள்ளுமாறு விருந்தினர்களுக்கு சர்ச்சில் சொன்னுராம். ஆனுல் சர்ச்சிலின் சமையல்காரர், பிரதமரைக் கேலிசெய்து விட்டு, "நீங்கள் பேசாமல் சாப்பிடுங்கள்" என்று சொன்னுராம். இந்த விவரம் இப்போது தான் முதன் முதலாக வெளியாகியிருக்கிறது.

# கண்டதும் கேட்டதும்

## கோகலே ஹாலில் ஸ்ரீ அரியக்குடி

சங்கீத ரத்னாகர அரியக்குடி ஸ்ரீ ராமானுஜய்யங்கார் கச்சேரி சென்னையில் பிரமாதமாக அமையக்கூடிய இடங்களில் கோகலே ஹாலை முக்கியமாக ரஸிகர்கள் குறிப்பிட்டுச் சொல்லுவார்கள். அதற்கேற்றாப்போலவே ஸ்ரீ அரியக்குடியின் பாட்டும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அங்கு மிக்க விசேஷமாகச் சோபிக்கிறது. சென்ற ஞாயிற்றுக்கிழமையன்று மைசூர் ஸ்ரீ டி. சௌடையா, பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் இவர்களது பக்க வாத்தியங்களுடன் ஸ்ரீ அய்யங்கார் பாடினார். காலஞ்சென்ற ஸ்ரீ பூச்சி அய்யங்கார் இயற்றிய கானடா (நேரநம்மி) வர்ணத்துடன் கச்சேரி துவங்கியது. வர்ணம் பாடியதோரணையே கச்சேரி மிகவும் உயர்தரமாக விருக்கும் என்பதை முற்கூட்டித் தெரிவித்தது. ஸ்ரீ அய்யங்கார் அன்று அநேகமாக எல்லாப்பாட்டுக்களுக்கும் ராகம், நிரவல், ஸ்வரம் பாடித்தள்ளி விட்டார். பெரிய, கன, ராகங்கள் எல்லாம் அவர் கச்சேரியில் இடம்பெற்றன. 3 காம்போஜி ராகங்களை இக் கச்சேரியில் அவர் பாடினார்! ஹரி காம்போஜி, யதுகுல காம்போஜி, காம்போஜி ஆகிய மூன்றுமே மிக முடுக்காகவிருந்தன. ஹரிகாம்போஜியில் "ராமா நன்னு ப்ரோவரா" என்ற கீர்த்தனத்தை வெகு உருக்கமாகப் பாடினார். நிறைந்த அலங்காரங்களுடன் கூடிய ரதம் அசைந்தோடுவதைப் பார்க்கும்போது மனத்தில் என்ன உணர்ச்சி ஏற்படுமோ அவ்வுணர்ச்சிதான்

★

"நீலம்"

மேற்படி கீர்த்தனையை அவர் பாடிக் கேட்டபோதும் ஏற்பட்டது.

யதுகுல காம்போஜி ராகம் ஆலாபனைக்குப்பின் "காலைத் தூக்கி நின்றாடும்" என்ற பாட்டைப் பாடியபோது கச்சேரியில் ஒரு விசேஷம் நிகழ்ந்தது. ஸ்ரீ அய்யங்கார் சபையோரை நோக்கி தாம் அப்பாட்டைப் பாடுவதை உற்றுக் கேட்கும்படி கேட்டுக்கொண்டார். 'என்னைக் காலைத்தூக்கி' 'என்னைக்காலைத் தூக்கி' என்று தாம் பாடுவதாகச் சிலர் குறிப்பிட்டது தவறு என்பதை அவர் நிரூபித்தவுடன் சபையில்ஆரவாரமும் கரகோஷமும் மிகுந்தது. காம்போஜியில் 'சிக்கல் மேவிய' என்றபாட்டை அனுபவித்து இனிமையாகப் பாடினார். பைரவியில் பல்லவி, ராகம், தானம், முதலிய எல்லாமே மிகவும் விரிவாக விருந்தன.

ஸ்ரீ அய்யங்கார் மனோபாவம், அவரது பாட்டின் போக்கு இவற்றையெல்லாம் நுட்பமாக உணர்ந்த ஸ்ரீ சௌடையாவும், ஸ்ரீ மணியும் சிறப்பான முறையில் தங்களது பக்க பலத்தை நிரூபித்தார்கள்.

## ஸ்ரீ முசிரி சுப்பிரமண்ய அய்யர்

சென்ற வாரம் சனிக்கிழமையன்று சென்னை ரேடியோவிலே ஸ்ரீ முசிரி சுப்பிரமண்ய அய்யர் $1\frac{1}{2}$ மணி நேரம் கச்சேரி செய்தார். ஆனால் அந்த $1\frac{1}{2}$ மணி நேரமும் ஓடிய சோடே தெரியவில்லை. காபி ராக ஆலாபனையிலிருந்து மத்தியமாவதி முடியும் வரையில் கச்சேரி விசேஷக் களை கொண்டு விளங்கியது. ஸ்ரீ முசிரி பாடிய உருப்படிகள் 5. அவை ஒவ்வொன்றுக்கும் ஸ்வரம் பாடினார். சாரங்கா, மத்யமாவதி ராக ஆலாபனைகள் மிக்கஉருக்கமாகவிருந்தன. ஸ்ரீ ச்யாமா சாஸ்திரியார் இயற்றிய "பாலிம்ஸு காமாக்ஷி" ('மித்திரன்' வாரப்பதிப்பில் வெளியானது) க்ருதியை படு பாங்காகப் பாடினார். சாரீர சௌகர்யம் பூராவும் இல்லையாயினும் ஸ்ரீ முசிரியின் மனோபாவம், கற்பனை, முதலிய அனைத்தும் இக்கீர்த்தனையை பாடியபோதும், ஆலாபனையின் போதும் பரிபூரணமாக உருவெடுத்தன. ஸ்ரீ சௌடய்யா மத்தியமாவதி ராகத்தின் ஜீவகளை ஒவ்வொரு இடத்திலும் ததும்பும்படி வாசித்ததையும் குறிப்பிடுதல் அவசியம்.

# கர்ம யோகி



**ஸ்ரீ. ஸி. ஆர். ஸ்ரீனிவாஸன்**




ஸ்ரீ திரு. வி. க.

கொட்டில் கோடியில் கட்டி இருந்தது ஒரு பசு. காமதேனு பரம்பரையில் பிறந்தது. வண்டு குடைய ஆரம்பித்தது அதை. இளம் வயது; திமிர் ஜாஸ்தி; பயம் அறியாது. தலைக் கயிறை கழற்றிக் கொண்டு வெளியிலே கிளம்பிவிட்டது. வயல் வயலாகத் திரிந்தது. வலுவில் வந்த ஸ்ரீதேவியை பலர் பயன்படுத்திக் கொண்டனர். பால் ஈன்ற வரையில் பெருமை கண்டது. மறத்த மாட்டுக்கு மதிப்பேது? கொட்டில் கோடிக்கு திரும்பிவிட்டது. வருவோர் போவோரை ஏற இறங்கப் பார்க்கிறது. சாந்தம் நிறைந்த பார்வை; சஞ்சலம் நீங்கிய பார்வை. பார்வையில் அடங்கிய பிரேமையைப் பருகுவாருண்டோ?

கூடமாக எழுதியதை குறிப்பாகச் சொல்லுகிறேன். திரு. வி. கல்யாணசுந்திர முதலியாருக்கு ஷஷ்டி அப்த பூர்த்தி கொண்டாடப் படுகிறது. 25 வருஷ காலமாக அவருடன் நெருங்கிப் பழகியிருக்கிறேன். பொது வாழ்வில் அவர் ஈடுபட்ட நாள் முதற்கொண்டு தெரியும்; தோளோடு தோள் நின்று பல துறைகளில் போராடியிருக்கிறோம். எங்களுக்கு வழிகாட்டிய பெரியோர் ஒருவர்பின் ஒருவராக மறைந்து விட்டனர். மறைய மறைய எங்களிருவருக்கும் இருந்த அன்யோன்யமும் அந்தரங்கமும் இறுகிக்கொண்டே வந்தன. முதலியாரின் வாழ்நாளை மதிப்பிடும்போது கொட்டில் பசுவின் நிலை ஞாபகத்திற்கு வந்தது!

திரு. வி. க. வெஸ்லி காலேஜில் தமிழ் பண்டிதராக இருந்தார். தமிழில் நல்ல பாண்டித்தியம் உண்டென்று சொல்லத் தேவையில்லை. சகஜமாக அவரிடம் எதிர்பார்க்கக் கூடியது அது. உலக விவகாரங்களில் அவர் கவனம் திரும்பியது தான் விசேஷம். கல்வியின் குறையை கேள்வியில் நிரப்பிக் கொண்டார். தான் கற்றது பெரிதல்ல; பிறருக்கு வழங்கியது பெரிது. சமய, சந்தர்ப்பம் ஒத்துக்கொண்டது. பழய யுத்த காலம்; புதிய யுகப் பிரமை! சுதந்திர நாதம் எங்கும் ஒலித்தது. இந்தியாவிலும் சுயாட்சிச் சங்கங்கள் தோன்றின. மக்களிடையே பிரசாரம் செய்யப் புறப்பட்டன. தாய் பாஷைக்கு மதிப்பு மீண்டது. ஆசையிருந்தும் ஆளக் கூடியவர் மிகச் சிலர் அந்த காலத்தில். திரு. வி. காவுக்கு சந்தர்ப்பம் வாய்த்தது.

தமிழிலே எவ்வளவோ பேர் பிரசங்கம் செய்து கேட்டிருக்கிறேன். நான் கண்ட வரையில் தமிழை அவரவ்வளவு அழகாக ஆண்டவர் கிடையாது. சுபாவமாக சுக பாவம் அமைந்திருந்தது. தூய்மையான தமிழ்; தெளிவு காட்டிய அறிவு; பண்பட்ட மனது. ஒன்றாக இவை திரண்டு செவிக்கு இன்பம் சொரிந்தன. பாஷைக்கும் கருத்துக்கும் உள்ள உறவை விளக்கின. மகாத்மா காந்தியின் ஆங்கிலப் பிரசங்கங்களில் காணும் அற்புதம் இது தான்! திரு. வி. க. ஆண்டது தேன் தமிழ். தமிழ்ச் சோலையில் அவர் கொய்த புஷ்பங்களையெல்லாம் சுதந்திர தேவிக்கு அர்ப்பணம் செய்தார். நறுமணம் நிறைந்த மலர்கள்! 'நாமார்க்கும் குடியல்லோம், நமனையஞ்சோம், நரகத்தில் இடர்ப்படோம்' என்ற பழய பாசுரத்தைப் புதிய பிரமாணத்திற்கு அவர் எழுப்பிய போது கேட்போர் மனதில் எழுந்த அதிர்ச்சியை யார் மதிப்பிடமுடியும்?

அவர் ஆற்றிய தொண்டில் பிரசங்கம் செய்தது சிறுபாகம் தான். பிரசாரத்தில் ஈடுபட்டவர் பிரசங்கத்தோடு நிற்கவில்லை. பத்திரிகை நடத்தவும் ஆரம்பித்தார். தமிழ் அபிமான மேலீட்டால் தனித் தமிழ் முறையை சிறிதுகாலம் ஆண்டு பார்த்தார். அநுபவச் சொற்களை திருத்த முயன்றார். பார்லிமெண்டுக்குப் பதிலாகப் 'பாராளுமன்றம்' என்று உபயோகித்தார். கோர்ட்டுக்கு பதிலாக 'நீதிமன்றம்' என்றார். ஸர்வகலாசாலைக்கு பதிலாக 'பல்கலைக் கழகம்' என்றார். கருத்திற்கிசைந்த சொற்றொடர்கள் தான் இவை. ஆனால் வழக்கத்தை மாற்ற முடியவில்லை. பழய பதங்களுக்குப் புது உருவம் கொடுக்க இயலவில்லையாயினும் புதிய கருத்துக்களுக்கு பொருத்தமான பதங்களை தேட உதவினார். தமிழிலே பேசும் பழக்கம் படித்தவர்களிடையே

பரவியதும் இம்முயற்சிக்கு ஆக்கம் அளித்து வந்தது. "மித்திரன்" நடையையும் "தேச பக்தன்" நடையையும் சிலர் ஒப்பிட்டு குணதோஷம் கூற முற்படுகிறார்கள். கால அறிவு காணாதவர்கள் இவர். சுவரை எழுப்பினால் சித்திரம் எழுதுவது எளிது. காலத்தை அநுசரித்து நடந்து வருவதால் தான் "மித்திரன்" சிரஞ்சீவியாக விளங்குகிறது.

ராஜீயக் கிளர்ச்சியை அநுசரித்துத் தொழிலாளர் இயக்கம் தோன்றிற்று. அதற்கு ஆக்கம் அளித்து உருவாக்கி உயிர் ஊட்டியவர்களில் முதலியார் அவர்களை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். தொழிலாளர்களிடையே நெருங்கிப் பழகியவர்களுக்குத்தான் தொண்டின் சிறப்பும் சிரமமும் தெரியும். எளிய ஜீவனம் நடத்துவோர்; என்றும் குறைகள் மிகுந்தவர். கூட்டு முயற்சியும் கட்டுப்பாடும் பிறப்பது சிரமம்; காய்தாவும் கண்டிப்பும் நிலைப்பது இன்னும் சிரமம். சங்கம் தோன்றி சிறிது பலம் பெற்றால் போதும்; அதைக் குலைக்க பல சக்திகள் தோன்றும்; அங்கத்தினர்களே கோடாரிக் காம்பாகக் கிளம்பிவிடுகிறார்கள். சங்கத்தின் அடிப்படையான தர்மங்களையே பலர் அறியவில்லை. இவ்வளவு இக்கட்டுகளுக்கு இடையே ஒருவர் விடாது உழைத்து நல்ல பெயர் எடுப்பது எளிதல்ல. திரு. வி. க. வின் அசாதாரண குணங்களே அவருக்கு அழியாப் புகழை இந்தத் துறையில் தேடிக் கொடுத்தன.

நிஷ்காமசேவையில் ஈடுபட்டு துறை கண்ட இடமெல்லாம் தொண்டாற்றினார் பெரியார். மெய்யறிவு மேலிட்டது. நடை உடை பாவனைகளில் படிப்படியாகக் கண்ட மாறுதல்களே இதற்குச் சான்று. சதஸுக்கு அங்கமாக உடை தரித்த காலம் உண்டு. இன்று ஆண்டியாக மாறிவிட்டார். இருள் நீங்கி அருள் பெற்று பொருளிலே பிரமை கழிந்து விட்டது. சுபாவமாகவே சாந்தமூர்த்தி எனலாம். அநுக்கிரகத்தால் அன்று கண்டது அநுபவ முதிர்ச்சியால் இன்று சோபிக்கிறது. பதட்டமாக என்றும் அவர் பேசியதில்லை. பக்குவமாகவும் இன்று பேசுகிறார். சிநேகத்திற்கு பாத்திரமானவர். சிநேகத்தை லௌகிக சாதனமாக கொண்டவர் அல்ல. லாபத்தை பிரதீக்ஷிக்கும் சிநேகமல்ல. ஏழை எளியோருக்கு இரங்கி இயன்றதெல்லாம் செய்வார். இயற்கைப் பிரபு வென்று சொல்வது மிகையாகாது. பணியாற்றி பிரமை நீங்கி பரத்தில் மனம் லயித்து பத்து வருஷங்களாகின்றன. வேதாந்த விசாரணையில் ஈடுபட்டு விளக்க உரைகளை ஆங்காங்கு வழங்கி வருகிறார். நல் வாழ்வுக்கு சிறந்த உதாரணம் அவர். நல்லார் உள்ள வரையில் நாட்டுக்கு நலனுண்டு. நல்லாரைக் கொண்டாடுவோம்!

# செஞ்சொற்புலவர் திரு. வி. க.



[ஸ்ரீ எஸ். வையாபுரிப் பிள்ளை]

நமது தாய்த்திரு நாட்டுக்கும் தமிழன்னைக்கும் பெருந்தொண்டாற்றி வரும் திரு. வி. கலியாணசுந்தரனாரை அறியாதார் இலர். இவர் மக்களை அவர்கள் கொண்ட குறிக்கோளிலே சென்றெய்துமாறு முன்னின்று நடத்தவல்ல தலைமக்கட்குரிய பண்புகள் பலவும் இயல்பாகவே வாய்க்கப்பெற்றவர்; உள்ளொளியுடையவர்; பரந்த நோக்கமுடையவர்; அறிவு சான்றவர்: உறுதி படைத்தவர்; ஆற்றல் மிக்கவர்; அன்பு நிறைந்தவர். இவற்றோடு கல்வியிற் சிறந்தவர்; சொல்வன்மை படைத்தவர். இன்னோரன்ன இயல்புகளையுடையவரன்றோ தாய்த்திரு நாட்டுக்குத் தொண்டு புரியத் தக்கவர்.

தாய்த்திரு நாட்டுத்தொண்டு தமிழ்த் தொண்டினை அடிப்படையாகக் கொண்டதாகல் வேண்டுமென்பது கலியாணசுந்தரனார் கருத்து. இருவகைத் தொண்டுகளுக்கும் நெருங்கிய பிணைப்பு உண்டு. ஒன்றை ஒன்று தழுவியது. ஒன்றற்கு மற்றொன்று இன்றியமையாதது. தாய்மொழிப் பற்றின்றித் தாய்நாட்டுப் பற்று இல்லையாம். அங்ஙனமே தாய்நாட்டுப் பற்றின்றித் தாய்மொழிப்பற்றும் இல்லையாம். இருவகைப் பற்றும் இல்லாதவர் மக்கட் பிறப்பில் வைத்து எண்ணத்தகாதவர். இறைவனுலகில் அவ்வாறமைந்த மக்கள் ஒருவரேனும் உளராயின் அந் நாடு நாடன்று; சுடுகாடேயாம். இவ்வுண்மையை இளமையில் தாமே நன்குணர்ந்தவர் கலியாணசுந்தரனார். இவர் தாய்மொழிப் பற்றில் தேசப் பற்றையும் தேசப்பற்றில் தாய்மொழிப் பற்றையும் விதைத்துச் செழிக்கச் செய்து வருபவராவர்.

தாய்மொழி புராணவாயிற்பட்டு மீட்சியில்லாத நெறியை அடைந்திருந்தது. அதனைத் தமது அறிவுரங்கொண்டு வலிதின் வாங்கி அதற்குத் தேசப் பற்று என்னும் உயிராற்றலைக் கலியாணசுந்தரனார் உதவினர். இப் புதிய ஆற்றலால் தமிழ் மொழி புத்துயிர் பெற்று இளமை வேகத்துடன் தமிழ் நாட்டில் பரவத் தொடங்கி விட்டது. உயிருள்ள, வேகமுள்ள ஆற்றலுள்ள புதிய தமிழ் இவர் எழுதியுள்ள அழகிய நூல்களிலே மிளிர்ந்து பாய்கின்றது.

---



# சாந்தினி





"கஜமுகன்"

★

## அத்தியாயம் 5

நான் சிரித்துக்கொண்டே "அநு! நீ வேண்டுமானால் உலகத்தை அறிந்துகொள்ளவில்லை. எனக்கு அந்த சக்தி கொஞ்சம் இருக்கிறது. எதற்காகச்சாந்தினி கூற வேண்டும்? 'உன் அகத்தின் அழகுதான் ராம்பிரகாஷ் போனதினின்று முகத்தில் பிரதிபலிக்கிறதே! அதைவிட உன் மறைமுகமான வார்த்தைகளில் தான் உன் உள்ளத்திலுள்ள ஆசையின் துடி துடிப்பு இருக்கின்றனவே! இதைக்கூட அறியமுடியாவிட்டால் என்ன பிரயோஜனம்?" என்றேன்.

"நிர்மல்பாபு! இந்த விஷயம் நேற்றுவரையில் எனக்கு ஒருத்திக்குத்தான் தெரியும் என்று நினைத்துக்கொண்டு சாந்தினிக்கு என் மனம் ஆறுதலடையும் பொருட்டு அதைக் கூறினேன். இது உங்களுக்குத் தெரிந்திருப்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ராம்பிரகாஷ் இன்னொருத்தியைக் காதலித்தான் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்"

"நீ அவன் பேரில் அவ்வளவு நம்பிக்கை கொண்டதற்கு காரணம் என்ன அதைச் சொல்?"

"நிர்மல்பாபு! இதையெல்லாம் உங்களிடம் சொல்வதற்கு மனம் சம்மதிக்குமா?"

"சம்மதிக்காவிடில் வேண்டாம் அநுராதா. உன் மன வேதனையைக் கிண்டுவதில் எனக்கென்ன லாபம்? உன் மனம் சாந்தியடைவதற்கு ஏதாவது கூறலாமென்றுதான் உன்னை அழைத்தேன். ராம்பிரகாஷ் உன்னை விரும்பவில்லை என்பதை இன்று முதல் நீ அறிந்துகொள். அவனை நீ நினைத்து உருகுவதில் பயனில்லை. உன் காதல் வீணானது வருந்தத் தக்கதுதான். உன்னை விரும்பாதவனை நீ அடைய நினைப்பது துர்லபமே. உன் வாழ்க்கை சீர் கெட்டு விடும் அவனை நினைத்துக் கொண்டுருந்தாயானால். அதைக் கூறத்தான் உன்னை அழைத்தேன். இவ்வளவு நாளாக அந்தரங்கத்தில் அடக்கி வைத்திருந்த ஆசை யெல்லாம் வெறும் கனவு போலல்லவா ஆக்கிவிட்டான் என்று நீ நினைப்பாய். அதுகனவுதான். மனித உள்ளத்தின் தராதரத்தைஅறிந்துகொள்ளாமல் வீண்ஆசைகொண்டால் கனவாக முடியாமல் எப்படித்தான் முடியும்? நான்சொல்வதில்நம்பிக்கையில்லையானால் ஒரு காலத்தில் அதை நீயே அறிந்து கொள்வாய். ஏன்? நானே ராம் பிரகாஷ் மூலமாகவே நிரூபிக்க முடியும். இவ்வளவும் சொல்வதற்கு நான் யார் என்று கேட்பாய்! உன்னுடன் பழகிய தோஷந்தான் அப்படிக் கூறச்செய்தது. சாந்தினியைச் சகோதரியாக நினைத்து அவள் வாழ்க்கை நலன்களில் நான் கருத்துக்கொண்டிருக்கிறேன் என்பது உனக்குத் தெரியும் அதே போல் உன்னையும் அவள் மாதிரியே நினைத்து உன் வாழ்க்கையிலும் நான் கருத்துக் கொண்டிருக்கிறேன். அதனால்தான் கூறினேன்" என்றேன்.

அநுராதாவின் கண்களில் மளமளவென்று நீர்துளும்பிவிட்டது. "நிர்மல் பாபு! நான் கொண்டிருந்த எண்ணங்கள் இவ்வளவும் வீணாகும் என்று எண்ணவில்லை. என்ன இருந்தாலும் அவர் பேரில் கொண்ட ஆசை என் ஹிருதயத்தில் ஒரு மூலையில் இருந்து கொண்டு தான் இருக்கப் போகிறது. அதற்கு என்னால்



சாந்தினி ஆவேசம் வந்தவள் போல் பேச ஆரம்பித்து விட்டாள்.

பரிகாரம் ஒன்றும் செய்ய முடியாது. உங்கள் மூலம் அவருக்கு என் பேரில் ஆசையில்லை என்பது மட்டும் தெரிந்து கொள்ள முடிந்தது. உங்களை இந்த விஷயமாக நம்ப வேண்டியதற்கு ஒரு காரணமும் உண்டு. அவர் ஒரு நாளும் என் பேரில் காதல் கொண்டிருப்பதாக ஒரு வார்த்தை கூடக் கூறிய தில்லை. அதன் கருத்தை உங்கள் பேச்சினால் உணர்ந்து கொண்டேன். ஆனால் அவர் என்னுடன் பேசும்பொழுதெல்லாம் மிகுந்த கனிவுடன் உள்ளமுருக்குமாறு பேசுவார். அதிலிருந்து நான் அவர் என்பேரில் காதல் கொண்டிருக்கிறார் என்று எண்ணினேன். அதனால் அவர் பேரில் நான் கட்டுக்கடங்காப்ரேமை கொண்டுவிட்டேன். அந்தப்ரேமையின் ஜ்வாலை என்றும் தணியாது. அதற்கு என் பேதை உள்ளத்தைத் தான் நொந்து கொள்ளவேண்டும். நாளை எனக்குக் கல்யாணமானாலும் என் மனம் கொஞ்சம் கூட உருவாக இருக்கப் போவ தில்லை என்பது மட்டும் நிச்சயம். நான் இவ்வளவு படித்திருந்தாலும் என்பெற்றோர்களின் மனதிற்கு விரோதமாகப்போய் அவர்கள் மனதை நோகவைக்கும் எண்ணம் எனக்குக் கிடையாது. அதனால் தான் இந்த கல்யாணத்திற்கு அறை குறை மனதுடன் சம்மதிக்க நேர்ந்துவிட்டது. என் பெற்றோர்களுக்கு என்னை ராம்பிரகாஷிற்குதான் கொடுக்க வேண்டுமென்ற எண்ணம் இருந்தது. அவர் ஓடிப்போன பிறகு அந்த எண்ணத்தை விட்டு விட்டார்கள். அவர் பேரில் ஒருவித மாறுபாடான அபிப்ராயமும் கொண்டு விட்டார்கள். அதனால் தான் இப்பொழுது கல்யாணத்திற்கு என்னை வற்புறுத்துகிறார்கள். ஏன்? அதுவும் மூன்றுவது வெள்ளிக்கிழமை நடக்கத்தான் போகிறது. நீங்கள் அவசியம் வாருங்கள்" என்றாள்.

"அநுராதா! வருத்தப்படாதே நீ பாக்யவதி என்று தான் நான் சொல்வேன்" என்றேன்

அவள் போய்விட்டாள். அவள் மனதில் கொஞ்சமாவது நிம்மதி ஏற்பட்டிருக்கும் என்பது தான் எனது நம்பிக்கை.

(25-ம் பக்கம்)

# நிகரற்ற தமிழ் நாவலர்



(சுவாமி சுத்தாநந்த பாரதியார்)

**தி**ரு வி. கல்யாணசுந்தர முதலியார் அவர்களது பெருமையைச் சொல்ல முற்படும்போது சொற்கள் தங்கு தடையின்றி தாமாகவே முன் வந்து நின்று விடுகின்றன. தேனொத்த தமிழ்மொழியை ஸ்ரீ முதலியார் சிறப்புற ஆண்டு அனுபவித்து அதன் மணம் எங்கும் கமழச் செய்த காரணத்தால் புகழுரை எழுத முற்படுவோருக்கும் உற்சாகம் மூளுகிறது. ஸ்ரீ முதலியார் குறித்து ஸ்வாமி சுத்தானந்த பாரதியார் எழுதிய கட்டுரையின் ஒரு பகுதியில் அவ்வுற்சாகத்தைப் பூரணமாகக் காணலாம்.

ஒருதரம் பார்த்தால் மறக்க முடியாது. எத்தனை தடவை பார்த்தாலும் இன்னும் பார்க்க வேண்டும் எனத் தோன்றும். எவ்வளவு அளவளாவினாலும் பசித்தவனுக்குப் பஞ்சாமிருதம் போல் இனிக்கும். கேட்கக் கேட்கதெவிட்டாது. சொல்லுக்குச் சொல்புதிய கருத்துகள் காணும்-அத்தகைய இனியநண்பர் திரு. வி. கலியாணசுந்தரனார்.

திரு. வி. க. வுடன் நான் அடிக்கடி பழகியதுண்டு. ஒவ்வொரு தடவையும் அவரது மதி நுட்பத்தைக் கண்டு வியந்திருக்கிறேன். அவர் ஓர் இயற்கைப் புலவர்; எதையும் ஆழ்ந்தறிந்து உண்மையை ஊடுருவிப் பார்க்கும் ஆராய்ச்சியாளர்; பழமையின் நலத்தையும் புதுமையின் விரிந்த பயனையும் கொண்ட சீர்திருத்தக்காரர்; உள்ளொன்று புறமொன்றில்லாத உண்மையாளர்; நிகரற்ற செந்தமிழ் நாவலர்; கவியுள்ளம் படைத்த பாவலர்; தம் உள்ளத்திலிருந்து பிறர் உள்ளத்திற்குப் பேசும் செஞ்சொற் புலவர்; எந்தப் பொருளையும் புதிய மெருகு கொடுத்து அழகு செய்து தமிழன்னைக்கு அணிவிக்கும் பொருட் சிற்பி; பட்டம் பதவி மாலை ஊர்வலங்களில் வேட்கை கொள்ளாமல் இயல்பாகத் தமது கடமையை நாட்டிற்காகவே செய்யும் தூய பொதுநல வீரர்; விடுதலை வேட்கை கொண்ட தேசபக்தர்; காரியத்தை அஞ்சாமல் கெஞ்சாமல், தமது கருத்தைச்சொல்லும் இதழாசிரியர்; தமிழருக்குப் புதுவழி காட்டி எல்லாத் துறைகளிலும் பண்புறப் பணிசெய்த ஒப்புரவாளர்; தொழிலுலகிற்குக் கருணையுடன் தொண்டு செய்த வன்றொண்டர்; பெண்மையின் பெருமையை விளக்கி, இல்லறத்தின் பயனை வள்ளுவர் போலத் துலக்கிய சமுதாய நண்பர்; எம்மதமும் சம்மதமாய் ஒழுகும் சன்மார்க்க மணி.

இத்தகைய பெரியார் நமது தமிழ்நாட்டில் பிறந்திருப்பதே நமக்கொரு பெருமையன்றோ? தமிழர் சென்ற முப்பதாண்டுகளாகத் திரு.வி.க. வை நன்கறிவர். அவர் சொற்கள் தமிழர் உள்ளத்தில் ஊறிக்கிடக்கின்றன. திரு. வி. க. பேச்சென்றால் தமிழர் கூட்டம்கூட்டமாக வருகின்றனர். ஆனால் தமிழர் வங்காளிகளைப்போலத் தமது பெரியார்களைப் போற்றும் நாள் வர வேண்டும். திரு.வி.க. வங்காளத்தில் பிறந்திருந்தால் இப்போது உலகப் புகழ் பெற்றிருப்பார். அவர் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் ஐரோப்பிய மொழிகளில் உலாவும் அவரை ஓர் எமர்ஸன் போல் உலகம் மதிக்கும். போகட்டும்; திரு.வி.க.வின் அறுபதாம் ஆண்டு விழாவையாவது தமிழர் எழுத்து மூலம் கொண்டாடுகிறார்கள்; அம்மட்டில் தமிழன்னை செய்த தவப்பயனே.

---

# மறவா நாட்கள்

★

ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார்

**அ**ரசியல் அரங்கத்திலே திரு வி. கல்யாணசுந்தர முதலியார் ஆற்றிய அருந்தொண்டும் மிகச் சிறந்ததாகும். பொறுப்பேற்று சேவை செய்த தலைவர்களை விரல் விட்டு எண்ணும்படியாக ஒரு சமயமிருந்தது. அந்தத் தலைவர்களுள் ஸ்ரீ திரு வி. க. முதலியாரும் ஒருவர். அக்காலத்தில் அவர் இயற்றியசேவையை ராஜாஜி 'மறவா நாட்கள்' என்ற மகுடம் கொடுத்து கீழ்கண்ட புகழ் குறிப்பை புனைந்திருக்கிறார்.

**கா**ந்தியவர்கள் இந்திய அரசியலில் தியாகமும் துணிச்சலும் புகுத்திய காலம் இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன். அப்போது தென்னாட்டில் எதிர்ப்பை விட்டுவிட்டுப் பொறுப்பை எடுத்துக் கொண்ட நான்கைந்து தலைவர்களில் ஒருவர் ஸ்ரீமான் திரு. வி. க. அவர்கள். பகைமையும் ஆகுலமும் போய் அமைதியும் நோன்பும் சாதனங்களான அதிசயத்தைக் கண்ட நாட்கள்-ஆங்கிலப் பிரசங்கங்கள் போய்த் தமிழன்றி வேறு பேச்சுத் தெரியாத பாமரர்களிடையே வேலை துவக்கிய புரட்சி நாட்கள்-தொழிலாளர்களைத் திரட்டிச் சங்கம் நிறுவும் அபாயநெறி முதல் முதலில் தோன்றிய நாட்கள்-அப்போது சுகமான பள்ளித் தொழிலை விட்டு அரசியல் அலைகடலில் புகுந்தவர் ஸ்ரீ திரு. வி. க. அக்காலத்தில் வேலை செய்த அரசியல் தொண்டர்களுக்குத் தான் தெரியும் திரு. வி. க. உள்பட எங்கள் சிலருக்குள் வளர்ந்த அன்பும் கட்டுப்பாடும் கூட்டுறவும். பிறகு எவ்வளவோசம்பவங்கள் நடைபெற்று விட்டன. ஆயினும் அவருடன் கூடி நாங்கள் சிலர் அந்நாட்களில் செய்த தொண்டில் கண்ட மகிழ்ச்சியை என்றும் மறக்க முடியாது.

—: :—

# அரசியல் சேவையும் தமிழ் வளர்ச்சி

★

(ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி)

**நா**ட்டை நலனுறச் செய்யும் முயற்சியில் மக்களின் மனே உணர்ச்சியைத் தட்டி எழுப்புவதற்குத் தமிழைப் போன்ற சாதனம் வேறில்லை. ஆங்கில மொழியின் மூலம் அம்முயற்சியில் ஈடுபட்டவர்கள் தாய்மொழியின் துணைகொண்டு பிரசாரம் செய்ய முற்பட்டனர். திரு வி. க. முதலியார், ஒரே மூச்சில் இருவித சேவை செய்த விவரத்தை இக்கட்டுரை தெளிவாக உணர்த்தும்.

**சு**மார் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்வரை இருந்தநிலை வேறு. இன்றுள்ள நிலைமை வேறு. அப்போது தமிழில் பெரும் புலமை வாய்ந்த ஒருவர் அரசியல் தொண்டில் ஈடுபட்டு, அழகிய தமிழில் பிரசங்கங்கள் செய்யவும், பத்திரிகை நடத்தவும் முன் வந்தது பலருக்கும் அளவிலா வியப்பையும் ஆநந்தத்தையும் அளித்தது. பழந்தமிழ் இலக்கியங்களின் சுவையில் திளைத்து, மீண்டும் மீண்டும் தமிழ்ப் பெருங்காவியங்களைப் படித்துப் பயின்ற அவர், நவீனமான நவநாகரிக வாழ்க்கையில் கலந்துள்ள கருத்துக்களையும் தமதாக்கிக் கொண்டு, இலக்கண வழுவின்றி, தெளிந்த தமிழ்ச் சொற்களின் மூலம், மக்களின் மனங்களைக் கொள்ளை கொள்ளுமாறு, உணர்ச்சி வேகம் ததும்பப் பல பிரசங்கங்களைச் செய்து வந்தார். பல கட்டுரைகளை எழுதி வந்தார்; புறநானூறு முதலிய மிகமிகப் பழமையான தமிழ் நூல்களிலிருந்தும், பிற்கால நூல்களிலிருந்தும் அரசியல் விஷய சம்பந்தமாகவுள்ள தக்க மேற்கோள்கள் பலவற்றை எடுத்துக் காட்டினார். மேலை நாடுகளில் செழித்து வளரும் நவீன அரசியல் கருத்துக்களைத் தமிழ் மொழியில் புகுத்தி, அதை வளம்பெறச் செய்தார். அவர் தாம் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் என்று சொல்ல வேண்டுவதில்லை. அக்காலத்தில் பல பிரசங்கிகளுக்கும் எழுத்தாளர்களுக்கும் அவர் ஒரு மார்க்கதரிசியாக இருந்தார். தன்மையறியாமலே பலர் அந்நாளில் அவருடைய பிரசங்க நெறியைப் பின்பற்ற முயன்றார்கள்; அவருடைய எழுத்து முறையைத் தம்மால் இயன்ற அளவில் அனுசரிக்கத்தொடங்கினார்கள். தமிழ் நடை அரசியல் துறையில் வளம்பெற்று விரிவடைந்ததற்கு அவரை ஒரு முக்கிய காரணமாகக் கூற வேண்டும். அரசியல் சேவையால் தமிழை வளர்த்த பெருமையில் பெரும்பகுதி திரு. வி. கலியாணசுந்தர முதலியாரைச் சேர்ந்ததென்றே நான் கருதுகிறேன்.

---

# தமிழ்ப் பண்பாடு



டி. கே. சிதம்பரநாத முதலியார்.

தமிழ் பாஷையை மதித்து நடப்பவர்களும் இருக்கிறார்களா? என்று திகைத்து நிற்கும்படியாக ஒருகாலமிருந்தது. ஆங்கில பாஷையில் கொண்ட மோஹமே திகைப்புக்குக் காரணம். அந்த நாட்களில் ராயப்பேட்டையில் சாது அச்சுக்கூடத்தை நிறுவி அதன் மூலம் தமிழில் எங்கும் ஊக்கம் பிறக்கச் செய்த திரு வி. கா. வின் சேவையை உணர்த்தி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் ஓர் கட்டுரையை எழுதியுள்ளார்.

**செ**ன்னையில் ஆங்கிலம் வந்து பண்ணின ஆர்ப்பாட்டத்தில் தமிழுக்கும் இடமுண்டா? தமிழையும் தமிழ்ப் பண்பாட்டையும், பொருட்படுத்துவதற்கு ஆளுமுண்டா? என்று சொல்ல இருந்த காலத்தில் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தம் வீட்டில் தமிழ்க் கொடியைப் பறக்கவிட்டுக் கொண்டிருந்தார். புலவர்களும் புலவர்கள் அல்லாதவர்களும் திரு. வி. க. வீட்டில் வந்து கூடுவார்கள். திரு. வி. க. வின் தமிழ் ஆர்வம் வந்தவர்களையும் பற்றிக்கொண்டது. ஆர்வத்தோடு தங்கள் ஊருக்குச் சென்றவர்கள் அங்கங்கே தமிழ் ஆர்வத்தை விதைத்து வளர்த்தார்கள். "தேச பக்தன்" பின்னால் வந்த "நவசக்தி" போய் அப்படி வளர்த்த ஆர்வத்தை மேலும் மேலும் தூண்டிக்கொண்டிருந்தன. இந்த முயற்சிகளின் பயனாகத் தற்பொழுது, தமிழ்ப் பண்பாட்டை உணரவேண்டும், வளர்க்க வேண்டும் என்ற ஆசை தமிழ் நாடெங்குமே பரவியிருக்க காண்கிறோம். நல்ல முகூர்த்தத்தில் தமிழ் பண்பாட்டியக்கத்தைத் திரு.வி.க. ஆரம்பித்தார்.

சாது அச்சுக்கூடமும், திரு. வி. க. வும் நீடூழி வாழ்க!

இந்திய தேயிலையின் அபிவிர்த்தி

# பத்து லக்ஷம் ஏக்கரில் பத்து லக்ஷம் பேர்



பத்து லக்ஷம் ஏக்கரில் பத்து லக்ஷம் பேர்! பெரியதொரு இந்தத் தொழிலாளர் சேனை இந்தியாவில் ஐயாயிரம் தேயிலைத் தோட்டங்களில் உழைக்கின்றன. அங்கே ஜாதி மத பேதம் இல்லாமல் மனதில் திருப்தியும் மகிழ்ச்சியும் கொண்டு அவர்கள் உழைத்து வருகிறார்கள். இந்தியத் தேயிலைப் பானத்தை அருந்தி அதன் மூலம் இந்தியத் தொழிலாளியின் உழைப்பின் பயனைப் பெறுங்கள். அதுவே உலகத்தின் உன்னத பானம்.



இந்த விளம்பரத்தைக் கத்தரித்து எடுத்து உங்களுடைய பெயர் விலாசம் தொழில் முதலிய விபரங்களுடன் அனுப்புங்கள். விலாசம் இந்தியத் தேயிலை கமிஷனர், இந்தியத் தேயிலை மார்கெட்டு விஸ்தரிப்பு போர்டு தபால்பெட்டி நெ. 2172, கல்கத்தா. மேற்கண்ட விலாசத்துக்கு அனுப்பினால், "தி மார்ச் ஆப் இந்தியன் டீ" என்ற புத்தகம் உங்களுக்கு இலவசமாக அனுப்பப்படும். அது தேயிலைத் தொழிலைப்பற்றியும் அது எவ்வளவு உன்னதமான பானம் என்பதைப்பற்றியும் வர்ணிக்கும் புத்தகம்.

# இந்தியன் டீ

உலகத்தின் உன்னத பானம்



இந்தியன் டீ மார்கெட் எக்ஸ்பான்ஷன் போர்ட்டாரால் வெளியிடப்பட்டது

IX-190

# தமிழ்த் தொண்டு

—::—

(ஸ்ரீ வை. குஞ்சிதபாதம்)

ஸ்ரீ திரு வி. கலியான சுந்தர முதலியாரின் தமிழ்த் தொண்டைச் சிறப்புற எடுத்துக் கூறி நுங்கம்பாக்கம் கார்ப்பொரேஷன் ஹைஸ்கூல் தமிழாசிரியரும் வித்வானுமான வை. குஞ்சிதபாதம் ஓர் கட்டுரை எழுதியிருக்கிறார். அதுவருமாறு:-

திரு வி. க. பல்கலை பயின்ற தமிழ்ப் பெரும் புலவர்; சமரச ஞானி; அரசியலறிஞர். அவர் நாட்டுக்கும், மொழிக்கும் சமயத்திற்கும், சமூகத்துக்கும், தொழிலாளருக்கும் செய்த தொண்டுகள் மிகப்பல.

திரு வி. க. எளிமையும் இனிமையும் அழகும் அமைய இயற்பா இயற்றும் பாவலர். கேட்டாரைப் பிணித்துக் கேளாரும் விரும்பச் சொற்பெருக்காற்றும் நாவலர். திருக்குறள் போன்ற நூல்களுக்கு மிக விரிந்த விரிவுரை எழுதிவரும் உரையாசிரியர். மேல் நாட்டுக்கலை நுட்பங்களையும் நம் நாட்டுக் கலைச் செல்வங்களையும் ஆய்ந்து ஆய்ந்து உரை நடை எழுதிவரும் தேர்ந்த எழுத்தாளர்.

ஸ்ரீ திரு. வி. க. இயற்றிய முருகன் அருள் வேட்டல் முதலிய செய்யுள் நூல்கள் நான்கும் இடையறு தொழுகும் தேனருவி போன்று சொல்லொழுக்கும் பொருளொழுக்கும் பெற்று இனிமை வாய்ந்தது; உயிர்ப்புடைச் சொல் ஓவியங்களாய்த் திகழ்வன; நாடு, மொழி, சமயம் பற்றிய கருத்துக்களெல்லாம் கற்போருள்ளத்தைக் கனிவிக்குந்தகையன.

திருக்குறள் பாயிரம் நான்கு அதிகாரங்களுக்கும் நானூறு பக்கங்கள் கொண்ட விரிவுரை எழுதியுள்ளார். இதுவரையும் இவ்வளவு ஆழ்ந்து அகன்ற விரிவுரை எழுதினரில்லை. பெரிய புராணம், காரைக்காலம்மையார் பிரபந்தம் ஆகிய இரு நூல்களுக்கும் சிறந்த ஆராய்ச்சிக்குறிப்புரை எழுதியுள்ளார்.

கற்பவருள்ளத்தைக்கொள்ளை கொள்ளக் கூடிய மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் 'தமிழ்த் தென்றல்' 'தமிழ்ச் சோலை' 'பெண்ணின் பெருமை' 'முருகன் அல்லது அழகு' 'இளமை விருந்து' முதலிய தனி நடை வாய்ந்த உரை நடை நூல்கள் இருபத்தைந்து எழுதியுள்ளார். இவை, கற்போருக்கு வாழ்க்கை, நாடு, மொழி, கடவுள், இயற்கை முதலியவற்றின் உண்மைத் தத்துவங்களை எடுத்து விளக்குவன. பேச விரும்புவோர்க்கும், எழுதப் பழகுவோர்க்கும் இவ்வுரை நடை நூல்கள் பெருவிருந்தாகும்.

முன்னே நடைபெற்ற 'தேச பக்தன்' என்ற தினசரிப் பத்

(21-ம் பக்கம்)

# பெண்ணின் பெருமை

ஸ்ரீமதி ஈ. த. ராஜேஸ்வரி எம். ஏ., எல். டி.

"பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா" என்ற சொற்களை அடியாகக் கொண்டு கவியரசர் பாரதியார் பாட்டியற்றினர். அப்பாட்டிலமைந்த கருத்துக்கள் செயல் அளவுக்கு எட்டும் வகையில் ஸ்ரீ திரு வி. கல்யாணசுந்தர முதலியார் தீவிரமாக உழைத்தார். பெண்மையின் பெருமை குறித்தும் புத்தகம் ஒன்றை வரைந்துள்ளார். பெண்களின் நிலையை உயர்த்த அவர் பாடுபட்ட வரலாறுகளைத் தொகுத்து ஸ்ரீ ஈ. த. ராஜேச்வரி எம். ஏ. எல். டி., எழுதியுள்ள கட்டுரையொன்றில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:—

திரு. வி. க. இயற்கையிலே இளகிய மனமுடையவர். தனக்கென வாழாப் பிறக்குரியாளராம் பெருமையும் இவரிடம் உண்டு. பெண்களின் தாழ்ந்த நிலைமையைக்கண்ட இவர் மனம் சாந்தி அடையவில்லை. அவர்களை உயர்த்துவதற்கே உழைக்க வேண்டும் என்று காப்புக் கட்டிக்கொண்டார்; பலராலும் போற்றப்படும் திருக்குறளை எடுத்தார். திருவள்ளுவர் பெண்ணை எவ்வாறு மதித்தார் என்பதை உலகம் அறிய "பெண்ணின் பெருமை" என்ற நூலை எழுதி எம்மனோருக்கு உதவினர். இந்த நூல் தமிழ் நாட்டிலே ஒரு புத்துணர்ச்சியை உண்டாக்கி விட்டது என்பது மிகையாகாது. எளிய நடையிலே, தெளிவாகக் கூறப்பட்ட அவ்வாழ்ந்த கருத்துக்கள் படித்தவர்கள் மனதில் பசுமரத்தாணிபோல் பதியலாயின. இதுமாத்திரமல்ல. அவர் பெண்ணின் பெருமையை வற்புறுத்தாமல் பேசுவதே இல்லை. பெண்களுக்கு வீடுபேறில்லை என்றோர்க்கு ஆண் மகன் பெண்ணாக மாறினலன்றி அவனுக்கு வீடுபேறில்லை என்று சொல்லலாயினர். இவர் வணங்கும் கடவுளும் பெண்ணோடு விளங்கும் பெருமானே. இயற்கையைப் புகழ்வதும் பெண் வடிவம் கொண்ட தாயாய் இருப்பதாலேயே. நாட்டுரிமை கேட்பது இவருடைய பெண் தொண்டேயாம். பொய்த்துறவை ஓட்டி உண்மையான காதல் வாழ்வை-கடவுள் வாழ்வை-நிலைநாட்ட இவர் பட்ட பாடு சிறிதன்று.




31

# 'மணிபல்லவத்தில்'

★

**வ. வேணுகோபாலன்**

இரவு முழுவதும் கடலில் அலை மோதச் சென்றது கப்பல். நெடு நேரம் விழித்திருந்த பலரும், விடியற்காலையில் சிறிது அயர்ந்து கண்ணுறங்கினர். உலகைச் சூழ்ந்து மூடியிருந்த இருளைக் கிழித்து, உதய சூரியன் வெளிப் புறப்பட்டான்; தனது பல்லாயிரம் செங்கிரணங்களை நானு புறமும் போகவிட்டான் செந்நிறக்கதிரவன்; கடலின் அலைகள் மீதே, கதிரவனின் பிரதி பிம்பம் தக தக வென்று ஒளி பரப்பியது. மிக விரைவில் இருள் மாய்ந்து ஒளி பரந்தது. கப்பலிலுள்ளவர் யாவரும் கண் விழித்துக், காலைக்கடன்களை முடித்து, உதய சூரியனை அகம் விரும்பித் தொழுதனர். எல்லாருடைய மனதிலும், மணி பல்லவத்தைக்காணும் ஆவல் கொந்தளித்தது; 'ஓம் ஓம்' என்ற ஒலி யாவர் செவியிலும் இடைவிடாமல் சிறிது நேரம் ஒலித்தது. அவ்வளவில் யாவரும் குதூகலித்து எழுந்து மணி பல்லவத் தீவை நோக்கிக் கை கூப்பினர்; அணைந்து தழுவுவது போல் மணி பல்லவத்தை அணுகியது கப்பல்.

## மணி பல்லவத்தில்

பௌத்த பிக்ஷுக்கள், உபாஸகர்கள், மற்றுமுள்ள வணிகர்கள் பலரும் கப்பலைவிட்டு இறங்கியதும், புத்ததேவரின் பாத பீடிகையைத் தரிசிக்கச் சென்றனர். உடலும் உள்ளமும் பூரிக்க உள்ளம் உவந்து குதூகலத்திலிருந்த ஸத்துகனும், பத்திரையும் மணி பல்லவத்துறைமுகத்தில் தனித்து நின்று, கடற் காட்சியைக் கண்டனர். பின்னர் ஸத்துகன் பத்திரையுடன் அங்கு உலாவிய வண்ணம், மணிபல்லவத்திலுள்ள விசேஷங்களைக் கூறிக்கொண்டிருந்தான். பத்திரை அகம் களி கூர்ந்து அவற்றைக் கண்டு உலாவினாள். இருவரும் மணி பல்லவத்தீவில் உள்ள பல இடங்களிலும் உலாவினர். 'தரும பீடிகை' என்று புகழ்பெறும் புத்ததேவனின் பாத பீடிகையைத் தரிசிக்க எண்ணினர். உடனே அங்குள்ள 'கோமுகி' என்னும் பொய்கைக்குச் சென்றனர். பொன் மயமாகத் தக தக வென்று ஒளி வீசியது கோமுகிப் பொய்கை; அதில் தாமரை முதலிய பல வகை மலர்கள் பூத்து விளங்கின. அலர்ந்து நீர்த்துளி சிதறிய இதழ்களுடன் அசைந்தாடும் பூக்களில், பன்னிறப் பறவைகள் அமர்ந்து கல கல வென்று ஒலி செய்தன. காற்று சில்லென்று வீசியது. ஆழ்ந்து அகன்று பொலிவு பெற்று விளங்கிய கோமுகிப் பொய்கையில் பல காட்சிகளைக் கண்டவாறு இறங்கினர் ஸத்துகனும், பத்திரையும்; அவர்கள் உள்ளம் எங்கோ உலாவியது. பளிங்கைக் கரைத்தாற் போன்று தூய்மையுடன் விளங்கிய கோமுகிப் பொய்கையில் இருவரும் மூழ்கி விளையாடினர்; அவ்வளவில் சூரியன் நடுவானத்தில் உலா வந்தான். நாழிகை ஆகிவிட்டதை உணர்ந்த ஸத்துகன், விரைந்து எழுந்தான். இருவரும், மாற்றுடைகளை அணிந்து, பாதபீடிகையைத் தரிசிக்கப் புறப்பட்டனர். கோமுகிப் பொய்கையிலிருந்து, பல மலர்களைப் பறித்து எடுத்துக்கொண்டு சென்றனர். அந்நேரத்தில், அங்கு கூட்டம் மிகுதியாக இல்லை.

## 'முனிவர் எங்குள்ளார்'?

பாத பீடிகையை வணங்கி, பூக்களால் அருச்சித்தனர். மும்முறை வலம் வந்தனர்; இவ்விருவரது தன்மையையும் அறிந்து அங்குள்ள உபாஸகன் அறச்சாலைக்கு அழைத்துச் சென்று பழம் முதலியவற்றை அளித்தான்; அருந்திய பின்னர் இருவரும் அவ்விடம் விட்டுப்புறப்பட்டனர். சாவக நாட்டிலிருந்து ஒரு முனிவர் வந்திருப்பதாக ஸத்துகன் கூறியிருந்ததைப் பத்திரை நினைவுறுத்திக் கொண்டே இருந்தாள். ஸத்துகன் புன்னகையுடன் அவளைத் தனியே ஒரு புறமாக அழைத்துச் சென்றான். ஸத்துகன் சிந்தனை எதிலோ ஆழ்ந்திருந்தது. "அந்த முனிவரிடம் தான் அழைத்துச் செல்கிறேன்" என்று கூறிக்கொண்டே சென்றான். அவர்கள் சென்ற வழி கற்பாறைகளாலும், முட்புதர்களாலும் மூடியிருந்தமையால், போவதற்குச் சிரமமாகவே இருந்தது. பத்திரை பெரிதும் இடர்ப்பட்டுப் போனாள்; "எங்கே, இந்த முள் வழியில் போகிறீர்கள்!



'பத்திரையின் கைகள் சட்டென்று வேக முடன் முன் சென்றன. ஸத்துகன் விலாப் புறத்தில் அழுந்தின அவள் கைகள். ஆ! என்ற கூக்குரலுடன் ஸத்துகன் தலைகீழாகச் சென்றான்!............ஸத்துகன் அழிந்தான்.

முனிவர் எங்குள்ளார்?'' என்று கேட்டாள். ஸத்துகன் சிறிது மௌனமாக இருந்தான். மீண்டும் கேட்டாள். மறுமொழி கூற வில்லை. அவள் கால்கள் இரத்தக் களரியாகி விட்டன. சிறிதும் லக்ஷ்யம் செய்யாமல் சென்றான் ஸத்துகன். பழக்கமுள்ள ஒரு வழியில் செல்பவன் போல் போனான் அவன். இடையிடையே அவள் தடுமாறும் போது கைகொடுத்து அழைத்துச் சென்றான். வளைந்து வளைந்து செல்லும் அவ்வழியில், நேராகக் கற்பாறைகள் சென்றன. அதில் நடந்து களைப்புற்று, ஒரு மரத்தடியில் சோர்ந்து விழுந்தாள் பத்திரை; ஸத்துகன் திரும்பிப் பார்த்தான். அவள் பார்வையில் எவ்வளவோ அர்த்தம் நிரம்பியிருந்தன. இருந்த இடத்திலிருந்து பத்திரை, தான் வந்த வழியை நோக்கினாள். ஒன்றும் புலப்படவில்லை; தான் இருக்கும் இடம் ஓர் உயர்ந்த கற்பாறை என்பதும் பாத பீடிகை இருக்குமிடம் மிகவும் கீழே உள்ளதென்பதும், ஸத்துகன் கூறிய பின்பே, அவள் உணர்ந்தாள். அந்தத் தனியிடத்தைக் கண்டதும் பத்திரையின் மனம் சஞ்சலமடைந்தது. காரணமில்லாமல் அவள் அச்சத்தால் நடுங்கிக் கண்கலங்கினாள். அவள் நிலையை ஸத்துகன் எளிதில் உணர்ந்து புன்முறுவல் செய்தான்.

### பத்திரையின் கேள்விகள்

"இது ஒரு மலைக்குச் செல்லும் வழி போலிருக்கிறது! இங்குஏதற்காக வந்தீர்கள்?' என்றாள் கண்கலங்கி.

"ஆம்; மலைக்குச் செல்லும் வழிதான். அதோ தெரிகிறதே உச்சி, அங்கே தான் போக வேண்டும்; சிறிது களைப்பாறு; நீ சோர்வடைவாயென்றுதான் முதலிலேயே சொல்லவில்லை!''

''மலையுச்சிக்கு எதற்குப்போக வேண்டும்?''

''அங்கே தான், சாவக நாட்டு, முனிவர் தங்கியுள்ளார்! அவரிடம் உபதேசம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்றாயே! நினைவில்லையா?''

''ஆம்; அது நல்லதுதான்; ஆனால், மனித சஞ்சாரமே இங்கு இல்லையே! அவர் அங்கே என்ன செய்கிறார்? அவரைத் தவிர வேறு ஒருவரும் அங்கு இல்லையா?''

''ஏன்? இருப்பார்கள்! வருவதும் போவதுமாகத் தான் இருக்கும்; ஆனால் அவர் எங்கும் போகார்!''

பத்திரைக்கு ஸத்துகனின் வார்த்தைகள் சிறிது ஆறுதலைத் தந்தன; முனிவரைக் காண்பதிலும், உபதேசம் பெறுதலிலும், அவள் ஆவல் கொண்டவளாய்க் களைப்பு நீங்கினாள்; வழி நடந்த சிரமத்தைப் பாராமல், மேலும் நடக்கப் புறப்பட்டாள். ஸத்துகன் அவளை அழைத்துக் கொண்டு கற்பாறைகள் வழியே மலையில் ஏறத் தொடங்கினான். பத்திரைக்கு உள்ளம் படபடத்தது. மேலும், கீழும் பார்த்துக் கொண்டே மெல்ல மலைமேல் ஏறினாள். புதர்கள் நெருங்கிய அம்மலைப் பாதையில், யாரும் போய் வந்த சுவடுகூட இல்லை.

### ஸத்துகனின் நகைப்பு!

செங்குத்தாகச் சென்றமலையில் ஸத்துகன் அலக்ஷ்யமாகஏறினான். பத்திரை கால்கள் நடுங்கத் தட்டுத் தடுமாறிச் சென்றாள். இருதயம் துடித்தது அவளுக்கு. ஸத்துகன் கையை ஊன்றுகோலாகக் கொண்டு போனாள். வெயிலின் வெம்மை மிகுதியாயிற்று. ஒரு சில பறவைகளே, இடையிடையே இவர்களைக் கண்டு அஞ்சி ஓடிப் பறந்து கூக்குரலிட்டன. பலஜந்துக்கள் குறுக்கும் நெடுக்குமாக ஓடின. பத்திரை அவற்றைக் கண்டு நடுங்கினாள். பத்திரை அஞ்சி நடுங்கித் தயங்கும் போதெல்லாம், ஸத்துகன் ஒரு வெடி நகை செய்வான். அதைக்கண்டு மேலும் அஞ்சுவாள் பத்திரை. புதர் மிகுதியாயிருந்த இடங்களில் பலவிதச் சப்தங்கள் உண்டாகும்; அதனால் அவள் உள்ளம் வெடித்துவிடும் போல் இருக்கும். அப்பொழுது எள்ளி நகை செய்வான் ஸத்துகன். இவ்வாறே இருவரும் மலையில் ஏறினர்; ஸத்துகனுக்கு அளவற்ற குதூகலமும் ஒரு விதப் பரபரப்பும் ஏற்பட்டன. பத்திரைக்கு இருதயப் படபடப்பும், பெரும் பயமும் உண்டாயின. ஒரு சிறு சப்தம் கேட்டாலும், அவள் மார்பு விம்மி வெடித்து விடும்போல் துணுக்குறுவாள். கண்கள் இருள உடலுணர்ச்சியின்றி சோர்வுறுவாள். ஆனால் ஸத்துகன் என்றுமில்லாதபடி, குதூகலமுற்றிருந்தான். அந்தக் குதூகலம் எதற்கு? அவனுடைய வெடி நகையில் இன்னதென்று சொல்லமுடியாத ஓர் அரிய உண்மை பிரதி பலித்

(19-ம் பக்கம்)



# ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் க்ருதிகள்

[காப்பிரைட்]

[ அரியக்குடி ஸ்ரீ டி. ராமானுஜய்யங்கார் ஸ்வரப்படுத்தியது. ]

## I

### பல்லவி

காமாக்ஷி! நீ பதயுகமு ஸ்திரமனி
நே நம்மி யுன்னுநா சிந்தலெல்லனு தீர்ச்சம்மா

### சரணம்

(1) அம்ப! நனுப்ரோவ ஸமயமு, வினுமா-பதித பாவனிக
(2) அனுதின முசரணமனி நினுவேடுகொனி யுன்னஸுதுடம்ம-ஸதய
(3) ஸரஸிஜாஸனஹரீசவினுத! பாதா! நா தோவாதா
(4) கமலதள ஸமநயன கசஜிதகனு! சசதரனிபவதன
(5) மான வதிநினு ஸதாதலசின மானவுலகெல்ல பல மொஸகே
விருது கலதேவதயனி நேவினபடி நீவேகதி யனுத்ஸு
(6) பாவனி புரஹருனி ரமணீ பார்வதி ஸகல ஜனனி
பாத கமுலனு விடிகா தீர்ச்சி வரமொஸகுமு
(7) கனககிரி ஸதன நினுகொலிசின ஜனமுலகு தின தின முசுபமொஸகே
வனிச்ருதுலு மொரலிடகா மொரலு வினி வினி வினி
(8) பால சிஸலயசரண நிமிஷமுதாளநிக வினிமதக ஜகமன
தாமஸமு ஸேயகனே நன்னிபுடுப்ரோவுமு பராத்பரி
(9) குந்த முகுளரதனா ஸுரப்ருந்தவினுத பதா
புவிலோ வரதாயகி கத நாமொரலு செவுலகுவினத கிரிஸுத
(10) நீவலெனெ கலதா-நெரத்ராதவு
ஜகதிலோ நீது பதஸாரஸமுலு ஈபவ ஜலதிகி தரியனுத்ஸுமிகுல
(11) கமல ஸம்பவ ஸுரமுனீந்த்ருலசேதனு நினுபொகடுடகு
தரமம்ம சுபமிம்ம நினு நம்மிதினி ச்யாம க்ருஷ்ணஸோதரி
துரமுகனு—கருண ஸலுபுமிகனு.

II

| | | |
|---|---|---|
| | காமாக்ஷி! நீபதயுகமு-ஸ்திரமுஅனி | —காமாக்ஷி! உன் திருவடிகள் ஸ்திரமென்று |
| | நே நம்மியுன்னானு | —நான் நம்பியிருக்கிறேன். |
| | நாசிந்தலெல்லனு-தீர்சம்மா | —என் கவலையெல்லாம் தீர்த்து வையம்மா. |
| 1 | அம்ப! ா னுப்ரோவ-ஸமயமுவினுமா | —அம்பா. என்னைக் காப்பாற்ற ஸமயம் கேளுங்கள். |
| | பதிதபாவனிக | —பாபிகளை பரிசுத்தம் செய்யும் தெய்வம் நீயல்லவா. |
| 2 | ஸதயஅனுதினமுசரணமனி நினுவேடுகொனியுண்டேஸுது | —கருணாநிதியே! ஒவ்வொரு நாளும் நீயே சரணம் என்று ப்ரார்த்திக்கும் பிள்ளை நான் |
| 3 | ஸரஸிஜாஸன ஹரிசவினுதபாதா | —பிரும்மா. மஹாவிஷ்ணு, சிவன் இவர்களால் துதிக்கப்பெற்ற திருவடிகளையுடையவளே |
| | நாதோ வாதா | —என்னுடன் வாதா |
| 4 | கமல தள ஸமநயன | —செந்தாமரையின் இதழ்களைப்போல நேத்ரங்களையுடையவளே |
| | கசஜிதகனு | —மேகத்தைப் பழிக்கும் கூந்தல்களையுடையவளே. |
| | சசதரநிபவதனே | —சந்திரனைப் போல முகத்தை யுடையவளே. |
| 5 | மானவதி! நினுசதா தலசினமானவுலகு எல்ல | —மானவதி, உன்னை எப்பொழுதும் ஸ்மரிக்கும் மனிதர்களுக்கு |
| | பலமுஒஸகே-பிருதுகல | —பலத்தைக் கொடுப்பவள் என்ற பட்டம் பெற்ற |
| | தேவதயனி நேவினபடு | —தேவதை என்று நான் கேட்டு |
| | நீவே கதியனுத்ஸு | —நீயே கதியென்று |
| 6 | பாவனி புரஹருனி! ரமணி பார்வதி | —ஸகல லோகங்களையும் பரிசுத்தம் செய்கிறவளே! புரஹரனுடைய பத்னியே, பார்வதியே! |
| | ஸகல ஜனனீ | —எல்லாவற்றிற்கும் தாயே. |
| | பாதகமுலனு | —பாபங்களை |
| | விடிகா தீர்ச்சி | —வேகமாய்க் காப்பாற்றி |
| | வரமொஸகுமு | —நான் கேட்ட வரங்களைக் கொடு. |
| 7 | கனககிரிஸதன | —மேரு மலையில் வசிப்பவளே |
| | நினுகொல்சினஜனமுலகு | —உன்னைப் போற்றின ஜனங்களுக்கு |
| | தினதினமு சுபமொஸ்கேவுஅனி | —தினந்தோறும் மங்களத்தைச் செய்தாயென்று. |
| | ச்ருதுலு மொரலிடகா | —ச்ருதி முறையிட. |
| | மொரலு வினிவினி | —அந்த முறை பாடுதலைக் கேட்டுக் கேட்டு |
| 8 | பாலகிஸலயசரண | —இளம் துளிரைப்போன்ற சரணங்களையுடையவளே |
| | நிமிஷமு தாளனிகவினி | —இனி ஒரு நிமிஷமும் பொறுக்கமாட்டேன் |
| | மதகஜகமன | —மதம் பிடித்த யானையைப்போல் நடப்பவளே. |
| | தாமஸமுஸேயகனே | —தாமதமில்லாமல் |
| | பராத்பரி! நன்னு இபுடுப்ரோவுமு | —பாரத்பரி! என்னை இப்பொழுது காப்பாற்று. |
| 9 | குந்தமுகுள | —குருக்கத்தி புஷ்பத்தின் மொட்டைப்போன்ற |
| | ரதன | —பல் வரிசையுடையவளே. |
| | ஸுரப்ருந்த வினுதபதா | —தேவ கணங்களால் துதிக்கப்பட்ட பாதங்களையுடையவளே. |
| | புவிலோ வரதாயசிகத | —இவ்வுலகில் அடியார்கள் கேட்கும் வரன்களைக் கொடுப்பவளல்லவா. |

| | |
|---|---|
| நாமொரலு-செவுலகுவினத கிரிஸுத | —நான் முறையிடுவது உன் காதில் கேட்கவில்லையா-பர்வதராஜ குமாரியே. |
| 10 நீவலனே கலதா-ஈஜகதிலோ நெரதாதவு | —இவ்வுலகத்தில் உன்னைப்போன்ற கொடையாளிகள் உண்டா. |
| நீதுபதஸாரஸது-ஈபவ ஜலதிகிதரியனுத்ஸு மிருல | —இந்த ஸம்ஸார ஸாகரத்தைக் கடக்கும் கப்பலென்று மிகுந்த |
| 11 கமலஸம்பவ | —ப்ருஹ்மா |
| ஸுரமுனீந்த்ருல | —நாரதர், இந்திரன் முதலியவர்கள் |
| சேதனுநினு பொகடுடகு தரமம்ம | —உன்னைப் புகழ தரமா. |
| சுபமிம்ம | —எனக்கு மங்களத்தை செய் |
| நினுநம்மிதினு | —உன்னை நம்பினேன் |
| ச்யாம கிருஷ்ணஸோதரி | —ச்யாம கிருஷ்ணனுடன் கூடப் பிறந்தவளே! |
| துரமுகனு கருணஸலுபுமிகனு | —வேகமாக, உன் கருணையைச் செய் |

III

## ராகம் : யதுகுலகாம்போஜி — தாளம் : சாபு

ஸ ரி ம க ம ப த ஸா
ஸ நி த ப ம க ரி ஸ.

ஸா , ; பா | ; ; ; க்ஷி | ஸா ; , ரி ப | ம க ஸ ரி ம க க |
கா மா | தா நீ ப த | யுக மேஸ் திர மனி
ரீ ; , பா | த ஸா ரீ ம ப | தாஸ் நீ த | , ப மா காரி |
நே நம் பியுந்ஞனுநா சிந்தலெல்ல . னு தீர்சம்ம .

**சரணங்கள்**

1\. ஸா ரி ஸ ரி மா | க ஸ ரி ம க க ரி | ரீ ; , பப | த தா , ஸு க ||
அம்பநனுப்ரோ வஸமுயபுவினி மா பதி தபா வனிக

2\. ஸ ரி ப ம க ஸ ரி | ம க ரி ஸ ஸ ரீ , | ரி ப ப தா த த | மு மா க ரி ம க ||
அனுதி ன முசர ணமனி நினுவே டு கொனியுந்நஸு துடம்மஸதய

3\. ரி ஸ ரி பா ம க | ஸ ரீ ஸ நி த ப | தா ; , தா | ப மா கா ரி ||
ஸ ர ஸி ஜா ஸ ன ஹ ரீ ச வி னு த பா தா நா தோ வா தா

4\. க ஸ ரி ப ப ம க | க ரி ரி ஸ நி த ப | த நா ; த த | ப ப ம ம க க ரி ||
க ம ல த ள ஸ ம | ந ய ன க ச ஜி த க ஞ ச ச த ர நி ப வ த ன

5\. மா ப நி த ம ப | த பா ம க ரி க | ஸா ரி ஸ ரி மா | க ரி ம க க ரீ |
மா ன வ தி ரி நு . ஸ தா த ல சி ன மா ன வு ல கெல் ல ப ல மொ ஸ கே

ஸஸரீஸஸரீ | ,பபததஸா | ,பபததஸா | ,நிதபமகரி |
பிருதுகலதே வதயநினே வினபடி நீ வேகதியனுஸா

6. பா ;, மப | நிதபமகரிக | ரீ ;, ஸா | ரிபமகஸரிக |
பா வனி புரஹருனிரம ணீ பார் வதிஸகலஜன

ஸா ;, பா | தஸரி மபதத | ஸ்ா ;, பா | ரிஸ்நிதபமக |
னி பா தகமுலனுவிடி கா தீர் ச்சிவரமொஸகுமு

7. பமபநிதமப | நிதஸமகரிக | ஸஸரிஸரிபம | மகஸதபமக |
கனககிரிஸத னநினு கொலிசின ஜனமுலகுதின தினமு சுப மொஸ

நீ ;, பப | ததஸஸரிமப | தா ;, பத | ரிஸ்நிதபமக ||
கே வனி ச்ருதுலு மொரலிட கா மொர லுவினி வினி வினி

8. யாததஸ்பத | ஸ்நிநிததபம | பாநிநிதமப | நிததப்மகரி |
பாலகிஸலய சரணநிமிஷமு தாளனிகவினு மதகஜகமன

ஸாரிஸரிமா | பமபதாபத | ரிஸ்ா, மப | தபா; மக ||
தாமஸமுலே யகனெநன்னிபு டுப்ரோவுமு பராத்பரி

9. தாபமகரிம | கா ;, ஸரி | மாகரிஸநித | பா ;;, |
குந்தமுகுளர தன ஸுர | ப்ருந்தவினுத்ஸதா

ததஸபதஸ | ,ரிமபதஸ்ா | க்ரிஸ்நிதபம | கரிஸநிதபத |
புவிலோவரதா யநிகதனு மொரலு செவிதருகு வினதகிரிஸுத

10. தாபமகரிம | கா ;, ரிக | ரீ ;. ஸரி | ஸா ;.. |
நிவலெனகல தா ஸர தா தவு | ஈ.

ஸநித பா; | தாஸபதஸா | ரிமபதஸா | க்ரிஸ்நிதபா |
ஜகதிலோ நீதுபதஸா ரஸமுலுஈ பவஜலதிகித

ஸ்நிதபமகரி |
ரியனுசுமிகுல

11. ஸ்ரிக்ஸாக்ரி | ஸ்நிதபாதத | ஸா ;, பரி | ஸ்நிதபமகரி |
கமலயம்பவ ஸுரமுனீந்த்ருல சேதனு நினுபொகடெகு

ஸரிமா மகம | பாபமபதா | தபதஸ்ா. ஸ் | ரிக்ஸ்ாமக் |
தரமம்மசுப பிம்மநினுநம் மிதிவிச்யாம க்ருஷ்ணஸோதரி

ரிஸ்நிதபமக | ரிஸநிதபமக |
துரமுகனுகரு ணிஸலுவுமிகனு

## குண்டலகேசி

*(14-ம் பக்கத் தொடர்ச்சி)*

தது. அதைக்கண்டு பத்திரை திகைப்பும், அச்சமும் அடைந்தாள் என்ருல் அது ஒருவியப்பா? அவனுடைய புன்னகையால் எவ்வளவுநன்மை உண்டாகுமோ அவ்வளவைக்காட்டிலும், அவன் வெடிநகையால் பலவிபரீதங்கள் உண்டாகும் என்பதை பத்திரை நன்கு உணர்ந்திருந்தாள். அதனுல் அப்போது அவள் அஞ்சி நடுங்கவேண்டியிருந்தது. ஸத்துகனின் எதிர்பாராத வெடிநகைக்குக் காரணம் என்ன? என்பதை அவள் மனம் ஆராய்ந்தது. ஆனுல் அதற்குச் சமயம் ஏது? மேன் மேலும் ஸத்துகன் செய்கைகளும் பேச்சும், பத்திரையை கலக்கிவிட்டன. அவள் மனம் பல சிந்தனைகளுடன் எங்கோ உலாவியது. ஸத்துகன் பத்திரையைக் குதூகலப்படுத்துபவன் போல், பேசிக் கொண்டே சென்ருன். பத்திரையின் விழிகள் கருவண்டுகள் சுழல்வனபோல், ஸத்துகனை நோக்கிச் சுழன்றன; அச்சுழற்சியில், ஏக்கமும் பயமும் தாண்டவமாடுவதை ஸத்துகன் உணர்ந்தான். அளவு மீறி மதுபானம் செய்தவன், வெறி பிடித்துப் பேசி ஆடி செல்பவன் போல், ஸத்துகன் தோன்றினுன். அந்த வெறியாட்டை, பத்திரை அதற்கு முன் கண்டதே இல்லை.

### மலைச் சிகரத்திலே

இருவரும் ஒருவகையாக மலையுச்சியை அடைந்தனர். உச்சியை அடைந்ததும், அங்குள்ள காட்சியைக்கண்டு பத்திரை வியந்து நடுங்கினுள். மணிபல்லவத்தீவைச் சார்ந்த அம்மலை, மனித சஞ்சாரமே இல்லாதது. அதுவும் காடுகள் சூழ்ந்து விளங்குவது. அந்த மலையுச்சியில் சிறிதும், கண்ணுக்கு எட்டிய மட்டும், தங்குமிடமோ, நீர் நிலையோ எதுவும் இல்லை. முட்கள் போல் தலை நீட்டியிருக்கும் பாறைகளும் முள் மரங்களுமே அங்கு தென்பட்டன. ஸத்துகன் சொல்லியபடி அங்கு முனிவர் எவரும் இல்லை அம்மலையுச்சியிலிருந்து பார்த்தால். ஒரு புறம் கடல் தென்பட்டது. ஒருபுறமும் மணிபல்லவத் தீவின் தருமபீடிகை புலப்பட்டது. மற்ற இருபுறமும் புதர்களே தென்பட்டன. பத்திரை நின்ற இடத்தைவிட்டு நகர்ந்து செல்லவில்லை. கேள்வி கேட்கும் பாவனையாக ஸத்துகனை நோக்கினுள்; அவள் வெறித்துப் பார்த்த பார்வைக்கு பொருள் என்ன என்பதை ஸத்துகன் உணர்ந்தான்.

“இங்கு முனிவர் யாரோ இருப்பதாகச் சொன்னீர்களே! ஒருவரும் இல்லையே!” என்று கேட்டாள் பத்திரை. அவள் கேள்விக்கு ஸத்துகன் மறுமொழி கூறவில்லை; சிறிதே புன்னகை செய்தான். அதுவன்றி பத்திரையின் அருகில் சென்று அவள் இரு கரங்களையும் பற்றிக்கொண்டு நின்ருன். பத்திரை மீண்டும் சிறிது அச்சத்துடன், “ஏன் பேசவில்லை? எனக்குப் பயமாயிருக்கிறது! சட்டென்று சொல்லுங்கள்” என்ருள் ஸத்துகன் முகத்தை உற்று நோக்கி, என்ன சொல்வது? சொல்வதற்கு ஒன்றும் இல்லையே...... முனிவர் எவரும் இங்கு இல்லை” என்று ஏதோ முனகினுன் அவன். பத்திரை முன்னிலும் மிகுதியாக அச்சமுற்ருள். நிற்க நிலைகொள்ளாமல், “என்ன சொல்கிறீர்கள்? ஒன்றும் விளங்கவில்லையே! இப்படிப் பயமுறுத்தினுல் வந்த வழியே திரும்பவேண்டியதுதான்” என்ருள். அப்போது கல கலவென்று சிரித்தான் ஸத்துகன்; அவன் கண்களில் ஏதோ சூழ்ச்சியின் மின்னல் ஒளி விட்டு வீசியது. “என்ன இது? எப்போது பார்த்தாலும் சிரிப்பா? விளையாட்டிற்குச் சமயமில்லையா? இவையெல்லாம் விளையாட்டா?” என்று அச்சமும் வெறுப்பும் கலந்து கேட்டாள். அப்போதுதான் ஸத்துகன், தலை நிமிர்ந்து நின்ருன். பத்திரையின் இரு தோள்களையும் பிடித்தவாறே, “பத்திரை இவையெல்லாம் விளையாட்டல்ல! ஆனுல், நீதான் விளையாட்டில் வினையை வருவித்தாய். விளையாட்டின் இயல்பு உனக்குத்தான் தெரியாது!”

### என்ன வினையைக் கலந்தேன்?

“நான் என்ன இப்போது விளையாடினேன்? இங்கு எதற்காக வந்தோம் என்று நினைவில்லையா? சூரியாஸ்தமனம் ஆகப் போகிறதே! திரும்பவேண்டாமா?”

“திரும்பவேண்டியிராது! ஆம்! நீ இப்போது விளையாடவில்லை என்பது உண்மைதான்; முன்பு விளையாட்டில் வினையைக் கலந்தாய்! ஆனுல் அந்த வினை என் உள்ளத்தைச் சுட்டுத் திராத புண்ணுக்கி விட்டது; அந்தப் புண்ணை ஆற்றுவதற்காகவே இங்கு வந்தேன். நீயே அதை ஆற்றவேண்டும்!”,—ஸத்துகனின் வார்த்தைகள் கணீரென்று வெளிக் கிளம்பின. அவன் கண்கள் சிவந்து புடை பெயர்ந்தன.

“என்ன வார்த்தைகள் இவை? விளங்கவில்லையே! நான் என்ன விளையாட்டில் வினையைக் கலந்தேன்”? என்றபோது பத்திரையின் குரல் தழு தழுத்தது.

“சொல்லுகிறேன்! பத்திரை! உனக்குக் கள்வனல்லாத கணவன் கிடைப்பதற்காக, இப்போதே உனக்கு மறு பிறவி அளிக்கப்போகிறேன்; தெரிந்ததா? இதோ என் இருதயத்தின் உள்ளே புண் இருக்கிறது; நினைத்துப் பார் தெரியும்!”

“நான் என்ன செய்தேன்? நீங்கள் சொல்வனவெல்லாம் எதற்காக? உண்மையை விளங்கக் கூறுங்கள்!” என்று சிறிதே நகர்ந்து நின்ருள்.

“அன்று ஊடலில் அளவு மீறி என்னைக் கணவரென்றும் கருதாமல் கூறிய வார்த்தைகள் நினைவிருக்கிறதா?” என்று ஒரு பெருமூச்சு விட்டான்.

### கள்வனென்றதைப் பொறுக்க முடியுமா?

“என்ன கூறினேன்? நினைவில்லையே!” என்னும்போது நடுங்கினுள் அவள். ஸத்துகன் தன்னை ஏதோ வஞ்சிப்பதற்கு எண்ணி விட்டான் என்பதை அவள் உணர்ந்தவளவில் அவள் உடல் சிலிர்த்தது; குலை நடுங்கியது; கண்கள் நீரைக் கக்கின; கைகளைப் பிசைந்தவாறே ஸத்துகனை நோக்கினுள். ஸத்துகன் மிக அமைதியாக, “பத்திரை, நீ, என்னைக் கள்வனென்று இகழ்ந்தாயே! உன் உள்ளத்தில் சிறிதும் மென்மையே இல்லை! ஒரு பெண், ஒரு வீரனைக் கள்வனென்று இகழ்வதைப் பொறுக்க முடியுமா? அதுவும் தன் கணவனைக் கள்வனென்று அவன் முன்பே கூற எவ்வளவு துணிவும்

கபடமும் இருக்கவேண்டும்? பத்திரை! நான் கள்வன் தான்; என்னை நீ மணந்ததும் தவறு தான்; ஆனல் அந்தச் சொல்லை என்னுல் பொறுக்க முடியாது!"

அப்போது தான் பத்திரைக்குப் பழைய நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன. உண்மையை உணர்ந்தாள். மதி மயங்கினுள்; என்ன சொல்வதென்று தெரியாமல் சிறிதே பிரமித்தாள்; "ஆம்! ஊடலில் கூறினேன்! இன்று தான் தங்களுக்கு நினைவு வந்ததா? அதற்கு நான் இப்போது என்ன செய்யவேண்டும்? அதைப் பற்றி இப்போது என்ன?" என்ருள்.

"பத்திரை, அவ்வார்த்தைகள் என் உயிரையே உண்டு விட்டன! என் இருதயம் புண்ணுகி விட்டது; ஆருத புண்! இதோ, இந்தப் பாறை வழியே விழுந்து மறைந்து விடு; என்னுடைய இருதயப் புண் ஆறி விடும். உள்ளம் குளிரும்; உனக்கு விருப்பமில்லையேல் நானே உன்னை அப்புறப் படுத்துகிறேன்; என்னைக் கள்வா என்று கூறிய வார்த்தைகளுக்கு இதுவே பிராயச்சித்தம்; உன் ஆத்மாவும் சாந்தியடையும்; மறு பிறவியிலேனும் கள்வனல்லாத காதலனை அடைவாய்!"

## 'கோலை தண்டனையா'?

பத்திரை ஸத்துகன் மொழியைக்கேட்டதும் தூக்கி எறியப்பட்டவள் போலானுள்; "ஆ! கள்வனென்று கூறியதற்குக் கொலை தண்டனையா? ஐயா! இது உண்மைதானு? என்னைக் கொலை செய்யவா! இங்கு அழைத்து வந்தீர்! தேவா!" என்று மெய்சோர்ந்தாள். அவள் கண்களுக்கு ஸத்துகன் ஒரு கொலையாளியாகவே தோன்றினுன். ஸத்துகனைப் பற்றிய ஒவ்வொரு சம்பவங்களும் அவள் நினைவுக்கு வந்தன; ஒவ்வொன்றும் அலை மேலலையாக எழுந்தன. வசந்தியின் வார்த்தைகள் உண்மை என்பதை உணர்ந்தாள், இன்னது செய்வது என்று தோன்ருதவளாய்த் தயங்கினுள். பாம்பு சீறுவதுபோல் கணத்திற்குக் கணம் பெரு மூச்சு விட்டாள்: "பத்திரை, நாழிகை ஆயிற்று; கடைசியாக நீ வேண்டியதைக் கேட்டுக்கொள்! அதோ சூரியன் சிவந்து நெருப்புப் பந்துபோல் கடலில் குதிக்கிருன்; சிறிது நாழிகையில் இருள் கவிழ்ந்து கொள்ளும்; நீ சிரமப்படவேண்டாம்; புத்தஸ்மரணையுடன் தன்மயமாகி நில்; வருத்தமில்லாமல் உன் உடலை நாய், நரி, கழுகு தின்ருமல், உருவே தெரியாதவாறு உன் உயிரைச் சாந்தியுறச் செய்கிறேன்! கீழே தெரியும் பாறையில் உன் உடலிலிருந்து சிதறும் செங்குருதியைக் கண்ட பின்பே என் ஆன்மா சாந்தியடையும். இருதயம் துடிக்கிறது; அருகில்வா!" இவ்வாறு சொல்லி பத்திரையைத் தழுவிக்கொண்டான். அவள், உடல் பதற உள்ளம் பதறப் பேச்சவிந்து நிலை குலைந்தாள். வேண்டா வெறுப்புடன் அவன் அணைப்பைத் தாங்கிக்கொண்டாள். சட்டென்று அவள் உள்ளத்தில் ஒரு கிளர்ச்சி எழுந்தது. கண்கள் தாரை தாரையாக நீர் சொரிந்தன; வாடிய அவள் முகத்தில் புன்னகை தவழ்ந்தது; ஸத்துகனின் பாதங்களைக் கண்களில் ஒற்றிக்கொண்டாள்; அவள் உள்ளத்தில் பெண்மைக் குணம் மாறியது; "தங்கள் விருப்பம்போல் என் உயிரைத் தியாகம் செய்கிறேன்; எனக்குக் கணவனே தெய்வம்! ஆனல், ஒன்று; தங்களைக் கடைசி முறையாக மும்முறை வலம் வந்து வணங்கி, இம்மலைப் பிளவிலே, நீரில் மூழ்குவது போல் மூழ்குகிறேன். போதிநாதன் என் குற்றத்தை மன்னிப்பான்; தாங்களும் மறு பிறவியில் என்னை மன்னிப்பீர்கள்!" என்ருள். ஸத்துகன் கொலை வெறி பிடித்தவனுய்ப் புன்னகை செய்து, "பத்திரை, அவ்விதமே செய்! போதிநாதனே உன்னை மன்னித்தருள்வான்!" என்ருன்.

## 'தற்கோல்லியை முற்கோல்க!'

பத்திரையின் கண்களில் மின்னலொளி வீசியது. கை கால்கள் துடித்தன; இருதயம் விம்மிக் கொந்தளித்தது. பேச நா எழவில்லை. ஆனல் அவள் கண்களுக்கு முன் ஏதோ ஒரு தெய்வம் நின்று அவளுக்கு அருள் செய்வதுபோல் தோன்றியது. "தற் கொல்லியை மூற் கொல்க!" என்ற வாசகம் பத்திரையின் காதுகளில் இடைவிடாமல் ஒலித்தன, அது ஏன்? அவள் உள்ளத்தில் பெண்மைக் குணம் மாய்ந்தது; பேயின் குணமும் செயலும் தாண்டவமாடின; ஸத்துகனைக்கைகூப்பித் தொழுதாள்; அவள் உடலம் அந்தியின் செந்நிற ஒளியால் பொன் மயமாக அழகு பெற்று விளங்கியது. கூந்தல் அவிழ்ந்து காற்றின் வேகத்தால் நானுபுறமும் பறந்தன. அவள் கண்கள் மருண்டு சுழன்றன; அவளுடைய இளமை வனப்பைக் கண்டு, ஸத்துகன் சிறிது மனம் இரங்கினுன். 'இவள் உயிருக்கு, யான் யமனுகவேண்டுமா? இந்த நறுங்கனியை, நீண்ட நான் நுகர்ந்திருக்க இயலாமற் போயிற்றே! ஆனுல், என் உள்ளத்தின் புண் ஆறவேண்டுமே' என்று நினைத்தான். அடுத்த கணமே, இரத்த வெறி கொண்டான்; தீ வினையாகிய கடும் நோய் சுற்றுவது போல், பத்திரை, ஸத்துகனை வலம் வரலானுள். இரண்டு முறை வலம் வந்தாள், மூன்ரும் முறையும் வந்துவிட்டாள். ஸத்துகன் ஒரு புறமாய்ப் பார்த்தவாறே பிரமைகொண்டு நின்ருன். பத்திரையின் இருதயம் துடித்தது, கைகள் வெடவெடவென்று நடுங்கின; மூன்ரும் முறை வலம் வந்து முடியும் தருணம்! பத்திரையின் கைகள் சட்டென்று வேகமுடன் முன் சென்றன; ஸத்துகனின் விலாப்புறத்தில் அழுந்தின அவள் கைகள்; ஆ! என்ற கூக்குரலுடன் ஸத்துகன் மலைப்பிளவு வழியே பாதாளம் புகுவதுபோல் தலை கீழாகச் சென்ருன்! அஞ்சா நெஞ்சத்துடன் வெறித்த கண்களால் ஸத்துகனின் சிதறும் உடலை நோக்கியவாறு மலையுச்சியில் நின்ருள் பத்திரை; ஸத்துகனின் உடல், முட்டும் முடுக்கமான கற்பாறைகளில் மோதிச் சிதறி, ஒவ்வோர் அங்கமும் வேறுபட்டு அரைக்கணத்தில் உருத்தெரியாமல் அழிந்தது. ஸத்துகன் அழிந்தான்; பத்திரை பெரும் பேயானுள். நின்ற இடத்தில் நில்லாமல் அம்மலையுச்சியின் ஒருபுறமாக அம்பு வேகமாக ஓடினுள்; இருள் எங்கும் சூழ்ந்தது.

(தொடரும்)

# தாயும் தந்தையும்

ஸ்ரீ டி. பி. மீனாக்ஷிசுந்தரனார்



தொழிலாளர்களின் நலன்களைப் பார்த்துப் பாதுகாத்துப் பராமரிக்கச் சென்னையிலே ஓர் சங்கம் நிறுவிய பெருமை ஸ்ரீ கல்யாணசுந்தர முதலியாரைச் சார்ந்ததாகும். அத்துறையில் அவர் ஆற்றிய தொண்டை ஸ்ரீ மீனாட்சி சுந்தரனார் விரிவாகக் குறிப்பிட்டெழுதியுள்ளார். அவர் கட்டுரையில் காணும் ஓர் பகுதி வருமாறு:—

திரு. வி. க அன்பு கனிந்தொழுகும் அரிய மனம் உடையவர். தீமைக்கு அஞ்சும் நெஞ்சுடைத்தவர். ஆனால் தொழிலாளர் மேடையிலோ பெருவீரராக விளங்குபவர். குண்டுகள் வீச்சிடையே குன்றாத உள்ளத்தோடும் உழைப்பவர். போர் ஆரவாரம் எவ்வாறே எங்கும் பரவிவிடுகிறது. முன்னைய உலகப்போர் முடிந்தபோது சென்னையில் நிகழ்ந்த தொழிற் போரைக் குறித்தோம். இப்போது நடக்கும் போரிடையும் தொழிற் போர் மூண்டது. குண்டு வீச்சுக்களையும் ஓராண்டுக்கு முன்னே நேரே கண்டோம். அப்போதும் திரு. வி. க. வே சென்னைத் தொழிற் சங்கத்தின் தலைவர். அமைதியாம் இவர் வடிவம் கொந்தளிப்பிடையே இயங்கி வரக் கண்டோம். அமைதியே முடிவில் வென்றது. இயற்கையின் போக்கு அது. இவர் வாழ்க்கையின் மறை பொருளும் அதுவே ஆம்.

இவர் தொழிலாளர் இயக்கத்தின் தாயும் தந்தையும்; படை வீரராகவும் மட்டும் விளங்கவில்லை. தொழிலுலகக் கருத்தைத் தமிழிலே தவழ்ந்து விளையாடி நடந்துவரப் பழக விட்டுச் சீராட்டிப் பாராட்டி வளர்த்த பெருமையும் இவருடையதே. தொழிலாளரின் 'நவசக்தி' பிறந்த இடம் இவரே ஆம். தொழிலாளரின் முதற் கவிவாணரும் இவரே. தொழிலாளரின் தேவாரமாக இவர் பாடிய 'பொதுமை வேட்டல்' என்றும் நிலைத்து விளங்கும்.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

திரிகையின் ஆசிரியராயிருந்தும், தாமே சொந்தமாக 'நவசக்தி' என்னும் வாரப்பத்திரிகை நடத்தியும், நல்ல தமிழ் நடையிலும் பத்திரிகை நடத்தலாம் என்பதைத் தமிழுலகினுக்குக் காட்டித் தமிழை வளம் பெறச் செய்தார்.

'திரு. வி. க.' எத்துறையில் தொண்டு செய்யப் புகுந்தாலும் அங்கெல்லாம் தமிழ் மணம் கமழச் செய்தார். அப்பெருமை அவர்களுக்கே உரியது. தமிழ் ஆர்வமுள்ள எவரும் திரு. வி. க. எழுதிய தமிழ்நலங்கனிந்த நூல்கள் முப்பத்திரண்டையும் வாங்கிப் படிக்கத் தவறலாகாது.

முடிவாகக் கூறுமிடத்துத் திரு வி. க. செய்துவருந் தமிழ்த் தொண்டில், தமிழ்த் தாய் பெண்ணின் பெருமையிற் பிறந்து, தமிழ்ச் சோலையில் வளர்ந்து தமிழ்த்தென்றலில் தவழ்ந்து, அழகில் பொலிந்து, உள்ளொளியிற் பெருகி, சமரசம்பேசி, தியானத்தில் அமர்ந்து இளமை விருந்தளித்து, விடுதலை அளிக்க முன்வந்துள்ளாள். இனி, அத்தமிழ்த் தாயை முடிதரித்து செங்கோலேந்தி அரியாசனத்தில் வீற்றிருக்கச் செய்யும் பொறுப்பும் திரு. வி. கவினுடையதே.

திரு. வி. க. இறைவன் அருளால் எல்லா நலமும் எய்தி நெடிது இனிது வாழ்க என அவ்விறைவன் இணையடிகளை இறைஞ்சி வாழ்த்துகிறேன்.



# தொழிலாளருக்குச் சேவை



(ஸ்ரீ ஆர். சபாபதி முதலியார்)

ஸ்ரீ கல்யாண சுந்தர முதலியார் தொழிலாளர் இயக்கத்தின் மூலம் செய்த சேவைகளைப் புகழ்ந்து ஸ்ரீமான் ஆர். சபாபதி முதலியார் ஓர் குறிப்பு எழுதியிருக்கிறார். அவர் தெரிவித்திருப்பதாவது:—

தொழிலாளர் உலகம் எப்போது சீர் பெற்று விமோசனம் அடையும் என்ற எண்ணமே திரு. வி. க. அவர்களின் மனத்தில் குடிகொண்டுநிற்கும். நான் அவரைச் சந்திக்கநேர்ந்த ஒவ்வொரு சர்ந்தர்ப்பங்களிலும் தொழிலாளர்களது க்ஷேமம், தொழிலாளர்களின் வேலை முதலியவற்றைப் பற்றித் தான் முதன் முதலில் விசாரிப்பார். அதன் பின்னர் நாட்டைப் பற்றிய விசாரணை ஆரம்பமாகும்.

ஸ்ரீ முதலியார் சைவ சன்மார்க்கத்திற்கு மட்டுமில்லாமல் வைணவமதத்திற்காகவும் தன்னாலியன்ற அளவுக்குச் சேவைசெய்திருக்கிறார். பிரசங்கங்கள் நடந்து முடிவடையும் போது அவற்றில் தெரிவிக்கப்பட்ட கருத்துக்கள் அனைத்தையும் தொகுத்து ஜனங்களின் மனத்தில் நன்கு பதியும்படி அவர் பேசுவதை விசேஷ அம்சமெனக் குறிப்பிட வேண்டும்.

தமிழில் பிரசங்கம் செய்யவோ, எழுதவோ விரும்புவர்கள் ஸ்ரீ முதலியாரின் பிரசங்கத்தையும், கட்டுரையும் கேட்டு, படித்தால் போதும்.

# கலியாணசுந்தரர்

அல்லது

# தமிழ்க்காதல்



பி. ஸ்ரீ

'காதல்' என்பது ஒரு குணம்; அது கண்ணால் காணும் பொருளன்று என்பதை அறியாதார் யார்? எனினும் பெண்கள் ஒரு சமயம் அந்தப் பொருளை மிதிலா பட்டணத்து வீதியிலே பார்த்து விட்டார்களாம், இராமபிரான் ஊர்கோலமாகப் போன காலத்திலே.

கண்ணினல் காதல் என்னும்
பொருளையே காண்கின் றேம்; [இப்
பெண்ணின்நீர் மையினல் எய்தும்
பயன்இன்று பெறுதும் என்பார்:
மண்ணினீர் உலந்து வானம்
மழையற வறந்த காலத்(து)
உண்ணுநீர் கண்டு விழும்
உழைக்குலம் பலவும் ஒத்தார்

என்று அந்தக் காட்சிக்குக் கம்பரே சாட்சி சொல்லுகிருர். இப்படியே நானும் ஒரு சமயம், "தமிழ்க் காதலைக் கண்ணினல் காண்கின் ருேமே! ஆஹா, என்ன பேறு பெற்ருேம்!" என்று அதிசயித்தேன். இந்தக் காட்சி எனக்கு முதல் முதல் கிடைத்தது சாத்தூரிலே பல ஆண்டுகளுக்கு முன், ஒரு தமிழ்ச் சங்கத்தின் ஆண்டுவிழாவில்.

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தார். பொருளைக் குறிக்கும் சொற்பொழிவுகள், பொருளைக் குறைக்கும் சொற்பொழிவுகள், பொருளை மறைக்கும் சொற்பொழிவுகள் எத்தனையோ அதற்கு முன் கேட்டிருந்தேன். ஆனல், அன்று நான் கேட்டதைச் சொற்பொழிவு என்ருல் போதாது; பொருட் பொழிவு—சொற்கள் மறைந்த பொருட்பொழிவு—என்ருலும் போதாது. அந்தச் சொற்பொழிவைத் தமிழ்ப்பொழிவு—தமிழ்க் காதலின் பொழிவு—என்றே கருதினேன்; பருகினேன் என்றே சொல்ல வேண்டும். பொருளிலே சொற்கள் மறைந்தன; தமிழிலே—தமிழ்க் காதலிலே—மறைந்து விட்டார் தமிழ்க் காதலர்! எனவே அன்று நான் கண்ணினல் தமிழ்க் காதலைக் கண்டேன், கலியாணசுந்தர வடிவத்திலே. "தமிழனய்ப் பிறந்த பயனை இன்று பெற்ருேம்!" என்று இறுமாந்திருந்தேன்.

மண்ணும் விண்ணும் ஒருங்கே வறண்டு எங்கும் தண்ணீர்ப் பஞ்சமாயிருந்த காலத்திலே, ஓரிடத்தில் அருமையாக இருந்த உண்ணு நீர் கண்ட மான் கூட்டம் பட்டபாடு பட்டது இராமனைக் கண்ட மிதிலைப் பெண் குலம்—என்று கம்பர் அந்த அழகுத் தாகத்தை எவ்வளவு அழகாக, எவ்வளவு அருமையாக வருணிக்கிருர்! எனக்கோ என் தமிழ்த் தாகத்தை வெளியிடவும் ஆற்றல் கிடையாது. அந்தத் தாகம் அவ்வளவு அதிகமாயிருந்ததென்பது திரு. வி. க. அவர்களின் ஜீவகங்கையான சொற்பொழிவுகளைக் கேட்ட பின்பு தான் எனக்கே தெரிந்தது.

பிறகு முதலியாரவர்களை விருதுநகரிலும் திருநெல்வேலியிலும் செட்டிமார் நாட்டிலும் சென்னையிலும் பல தடவை சந்தித்துப் பழக நேர்ந்தது. தமிழையும் ஆங்கிலத்தைப் போல் சக்தி வாய்ந்த ஒரு கருவியாகக் கையாண்டு, வாழ்க்கையின் பல துறைகளிலும் புதிய எண்ணங்களையும் லட்சியங்களையும் பரப்ப முடியும் என்ற அபிப்பிராயத்தை முதல்முதல் என் உள்ளத்தில் வேரூன்றச் செய்தவை திரு வி. க. அவர்களின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளுமே. இவை என்னைப் போன்ற எத்தனையோ தமிழர்களின் உள்ளங்களிலும் ஒரு புதிய சக்தியை விதைத்து, மொழிப்பற்று சமயப்பற்று நாட்டுப்பற்று என்ற முப்பொருளாகிய முழுச் செல்வத்தையும் விளைவித்துக்கொள்ள வசதி அளித்திருக்கின்றன.

தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் தமிழர்களின் சன்மார்க்க வாழ்விற்கும் திரு. வி. க. செய்திருக்கும் திருப்பணிகளை "நவ சக்தி" யென்ற ஒரே வார்த்தையால் குறிக்கலாம். இத்தகைய தலைப்பெயரோடு இவர் நடத்திவந்த பத்திரிகை, தமிழ்த் தென்றலாக நடந்து வந்து தமிழர்களுக்குப் புது விருந்தாகிப் புதிய ஆரோக்கியத்தையும் ஆற்றலையும் அளித்தது. தமிழ்த் தென்றல் சில சமயங்களில் புயலாகவும் பரிணமித்து அரசியல்-வானத்திலுள்ள நச்சுக் காற்றை அடித்துப் போகவும் உதவியது. எனினும் அந்தத் தமிழ்க் காற்று எவ்வளவு சமரசமாக வீசியதென்பதற்கு அந்தத் தமிழ்ப் பத்திரிகைக்குக் கலியாணசுந்தரர் இட்டிருந்த "நவ சக்தி" என்ற வடமொழிப் பெயரும் ஒரு நல்ல சாட்சியாகும்.

———

# யார் குற்றம்?

[தே. வீரராகவன்]

சென்ற வருஷம் தீபாவளிப் பண்டிகையின்போது மணக்குடிக்குப் போயிருந்தேன். அவ்வூரில் தான் என் ஸகதர்மிணி 'கமலா' ஜனித்தது; என் மாமனூர் ஜகஜாலப் புரட்டர் வசித்து வருவது. நான் அந்தப் பக்கம் தலை காட்டி ஏழெட்டு வருஷங்களுக்குமேலாகின்றன. வருஷா வருஷம், மாமனூர் வீட்டுக்குப் போய் சில நாட்களாவது அவரது பேட்டிக்குக் காத்து நின்று அவருக்குக் தாஸானுதாஸனாய் இருந்து விட்டு வர வேண்டுமென்பது என் பத்தினித் தெய்வத்தின் விருப்பம். அந்தப் பாழாய்ப்போன அதிகாரிகளுக்குள்—அவர்கள் தாம்—என் தலையெழுத்தை மதிப்பிடும் ஆபீஸர்கள்-ஒருவருக்காவது என் சம்சாரத்தின் ஆசை தெரிந்தால் தானே! சுவரில் அடித்த பந்தைப்போல் லீவுக்காக நான் போட்ட மனுக்கள் எல்லாம் 'லீவ் மறுக்கப்பட்டு' வந்து சேர்ந்தன. நல்ல வேளையாக இந்த வருஷம் என் அறிவில் ஓர் அபூர்வ யோசனை உதயமாயிற்று. அதுவும் என் அதிர்ஷ்டம் தான். வேண்டுமானால் கமலாவின் அதிர்ஷ்டம் என்று கூடச் சொல்லலாம். அதைப்பற்றி எனக்கும் கௌரவம் தான். இந்த வருஷம் தான் என் பழைய அதிகாரி மாற்றப்பட்டு அவர் ஸ்தானத்துக்கு ஒரு புது அதிகாரி வந்தார். தீபாவளி வருவதற்கு இரண்டு மாதங்கள் முன்னிருந்து தினம் காலை மாலை இரண்டு வேளையும் அவர் வீட்டுக்கு யாத்திரை செய்வேன். எஜமானி அம்மாள் கையிலிருக்கும் குழந்தையை நானே வலுவில் பிடுங்கி எடுத்துக்கொண்டு வெளியே சென்று அதற்கு மிட்டாய் வாங்கித்தருவேன். எப்பொழுதும் எஜமான் முன்பு பல்லை இளித்துக்கொண்டும் தலையைச் சொரிந்துகொண்டும் நிற்பேன். இவைகளுக்கெல்லாம் பலன் இல்லாமற் போகவில்லை. எஜமானி அம்மாள் என் எஜமானருக்குச் சிபார்சு செய்ய-இல்லை, இல்லை உத்தரவிட, எஜமானர் எனக்கு ஒரு வார லீவ் அனுமதித்தார். லீவ் கிடைத்த அடுத்த நாளே சகதர்மிணியும் நானுமாகப் புறப்பட்டு மணக்குடி வந்து சேர்ந்தோம்.

* * * *

தீபாவளி தினம். மாலை ஐந்து மணி இருக்கும். எங்கேயாவது வெளியே சென்று உலாவி வரலாம் என்று புறப்பட்டேன். எதிர்வீட்டு அண்ணுசாமி, "என்ன! சார்? ஆஸ்ரமத்துக்கா? நானும் வருகிறேன்" என்றூர்.

"ஆஸ்ரமமா? ஏது? எங்கே?" என்றேன்.

"ஓ! ஹோ! ஆமாம்! உங்களுக்குத் தெரியாது!" நீங்கள் இந்தப் பக்கம் வந்து தான் ஏழெட்டு வருஷங்களாச்சே! வாருங்கள் சொல்கிறேன். இங்கிருந்து ஆச்சிரமம் ஒரு மைல் தூரத்தில்தான் இருக்கிறது. அங்கு ஒரு சந்யாசி இருக்கிறூர். கூட அவர் மனைவியும் இருக்கிறுள்" என்றூர்.

"சந்யாசி என்கிறீர்! கூட மனைவியும் இருக்கிறுள் என்கிறீரே! இதென்ன கூத்து" என்றேன்.

"கூத்து ஒன்றுமில்லை. மேலே நடவும்; கதையைச் சொல்கிறேன்" என்றூர்.

* * * *

பழவேரியில் வக்ரதந்த முதலியார் தான் பெரிய புள்ளி. கிட்டத்தட்ட ஆறு ஏழு லகாரத்துக்குச் சொத்திருக்கும். நல்ல குணசாலி; அவர் உதார குணத்துக்கு அறிகுறியாக அவரைச் சதா பத்துப்பேர் மொய்த்துக்கொண்டே இருப்பர்.

முதலியாரின் மனைவி, தன் பெயருக்கு ஏற்றமாதிரி, குணத்திலும் தங்கம்தான். இரண்டொரு விஷயங்களில் தவிர மற்றெல்லா விஷயங்களிலும் முதலியாருக்குத் தகுந்த ஜோடி தான். புது நாடகமான தமக்குக் கர்நாடகமான மனைவி வாய்த்த விஷயத்தில் மட்டில் முதலியாருக்குப் பெரிய குறை. இருந்தாலும் என்ன செய்வது? காலம் தள்ளி வந்தார்.

கொஞ்ச நாட்களாக முதலியார் உலகை வெறுத்து விட்டவர்போல் நடந்து கொண்டார். பேச்சை மிகவும் சுருக்கிவிட்டார். இப்பொழுதெல்லாம் அவரை யாரும் சுற்றுவதில்லை. அவரும் எதிலும் பிடிப்புக் காட்டுவதில்லை. தினம் மாலை 5 மணிக்குத் தமது மோட்டாரில் ஏறிக்கொண்டு வெளியே புறப்பட்டாரானல் இரவு 10 மணிக்குத்தான் வீட்டுக்குத் திரும்புவார். எங்கே போவாரோ? எங்கே வருவாரோ? ஒருவருக்கும் தெரியாது. வந்ததும் சாப்பிட்டுவிட்டு நேரே மாடிக்குச் சென்று தமது அறையில் படுத்துக்கொள்வார்.

அவர் உதடுகளில் அரும்பிய முறுவலும், கண்களில் ஜ்வலித்த ஜீவனும் பேச்சில் ஒலித்த காதலின்பமும் அவரது சரச சல்லாப விளையாட்டுக்களும் எங்கோ மாயமாய் மறைந்துவிட்டதைக் கண்ட தங்கம்மாள் பெரிய சந்தேகம் கொண்டாள். 'எங்கே அடித்தாலும் நாய் காலை நொண்டும்' என்பது பழமொழி. அதுபோல ஒரு புருஷன் குணத்தில் மாறுதல் இருந்தால் அது ஒரே விஷயத்துக்காகத் தானிருக்கவேண்டும். அதுவும் ஸ்திரீ சம்பந்தமானதாகத் தான் இருக்கவேண்

டும். சமீபத்தில் தனக்கு வந்த கடுங்காய்ச்சல் காரணத்தால், கோவைப்பழம் போன்றிருந்த தன் உடல் சுட்ட கத்திரிக்காய் மாதிரி சுருங்கி, தலைமயிர் உதிர்ந்து, உதிராது நிற்கும் இரண்டொரு மயிரும் கொக்கிறகுபோல் வெளுத்துவிட்டது தான், முதலியாருக்குத் தன் மீதிருந்த பிரேமை குறைந்து விட்டதற்குக் காரணம் என்று தங்கம்மாள் தீர்மானித்துக் கொண்டாள். 'அரண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய் தான்' என்ற மாதிரி, முதலியார் தப்பித் தவறி ஏதாவது பேசினாலும், செய்தாலும் சந்தேகப் பிரகிருதியான தங்கம்மாளுக்கு அவற்றில் விபரீதம்தான்தெரிந்தது. முதலியாரின் துர் நடத்தையை வெட்ட வெளிச்சமாக்கி விடத்தக்க சமயத்தையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

அம்மாக்கண்ணு, முதலியார் வீட்டுச் சமையற்காரியாகவந்து நாலைந்து வருஷங்களாகின்றன. வந்தது முதல் இன்னும் தன்னூர்ப்பக்கம் போகவில்லை. ஊருக்குப் போய் வர மூன்று நாள் 'லீவ்' தரும்படி தங்கம்மாளை அடிக்கடி கேட்டு வந்தாள். ஒரு நாள் மாலை அம்மாக்கண்ணு எதிர்பாரா வண்ணம் தங்கம்மாள் அவளை ஊருக்கு அனுப்பிவிட்டு, "இன்று முதலியார் வண்டவாளத்தை அம்பலத்தில் இழுத்து விடுகிறேன். மெத்தைப் படியின் கீழே உள்ள அறையில் நடக்கும் ரகஸ்யக் கூட்டத்துக்கும் முற்றுப்புள்ளி வைத்து விடுகிறேன். அத்துடன் அம்மாக்கண்ணுவின் சிட்டையும் கிழித்து விடுகிறேன்" என்று கருவிக் கொண்டே இரவை எதிர்நோக்கியிருந்தாள்.

வழக்கம்போல், முதலியார் வெளியே சென்று விட்டு இரவு 10-மணிக்கு வீடு வந்து சேர்ந்தார். நேராகச் சமையலறைக்குச் சாப்பிடப்போனார். முதலியார் வந்து விட்டதை அறிந்த தங்கம்மாள் மாடிப்படியின் கீழுள்ள அறையில் சென்று இருட்டில் மறைந்து கொண்டு 'வரட்டும்! வரட்டும், என்று உதட்டைக் கடித்துக்கொண்டு நின்றாள்.

முதலியார் மோட்டார் டிரைவர் பொன்னு வண்டியை ஷெட்டில் நிறுத்தி விட்டு வழக்கத்துக்கு விரோதமில்லாமல் மாடியின் கீழ்ப் புறத்தறையில் நுழைந்தான். அம்மாக்கண்ணு ஊருக்குப் போனது அவனுக்கு என்னமாகத் தெரியும்? அறையில் காலடிச் சத்தம் கேட்கவே, எரிமலை போல் உள்ளே குமறிக் கொண்டிருந்த தங்கம்மாள், ஆத்திரத்தை எல்லாம் அடக்கிக் கொண்டு, முன்னே இரண்டடி நடந்து வந்து "எவ்வளவு நாழி? இதுதான் உன்மைக் காதலாக்கும்?" என்று சொல்லிக்கொண்டே பொன்னுவின் தோள்மீது சாயும்போது அப்பொழுது மாடிப்படி யேறிக் கொண்டிருந்த முதலியார், அறையில் தங்கம்மாள் குரல் கேட்பதைக் கண்டு இறங்கி வந்து கையிலிருந்த 'டார்ச் லைட்டை'ப் போட்டு உள்ளே பார்த்துத் திகைத்தார்.

சில தினங்களுக்கெல்லாம் பழவேரியை விட்ட முதலியார் மணக்குடி அபேதாநந்த ஸ்வாமியானார் என்று சொல்லி அண்ணாசாமி முடிக்கும்போது ஆசிரமத்தின் வாயிலில் தாய்மையே வடிவான, வெள்ளுடை தரித்த தபஸ்வி தரிசன மளித்தார்.

— * —

# சாந்தினி

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

## பிரிவு

அநுராதாவின் கல்யாணத்திற்குப் போயிருந்தேன். பாவம்! அவள் முகத்தில் கொஞ்சம்கூட குதூகலமில்லை. நான் அவ்வளவு சொல்லியும் அவள் இன்னும் வருத்தத்துடன் இருப்பது சற்றும் எனக்குப்பிடிக்கவில்லை. சாந்தினியும் வந்திருந்தாள். அவள் முகமும் அப்படித்தான் இருந்தது. அவளுக்கு உண்மை தெரிந்திருந்தால் அப்படியிருந்திருக்க மாட்டாள்.

கல்யாணமானதும் அநுராதாவை புருஷன் அழைத்துக் கொண்டு போகவேண்டுமென்று சொல்லிவிட்டான். இவ்வளவு சீக்கிரம் அவளைப் பிரிவோம் என்று சாந்தினி நினைக்கவில்லை. அவள் வருத்தம் கரை கடந்து போயிற்று.

அநுராதாவைப் பிரியும் தினமும் வந்தது. சாந்தினி அன்று சாப்பிடவேயில்லை. குழந்தை மாதிரி அழுத வண்ணம் இருந்தாள். மனித உள்ளங்கள் தான் எவ்விதம் ஒன்றுக் கொன்று பிணைந்து விடுகின்றன. ஆதிமுதல் ஒன்ருகப் படித்து விளையாடிய தோழிகள் இருவரும் பிரிவதென்ருல் கேட்க வேண்டியதில்லை.

"சாந்தி......போய்விட்டு வருகிறேன்......அநுராதா உனக்கு மன்னியாக வரும் பாக்யம் செய்யவில்லை......" என்று கண்களில் நீர் வழியக் கூறினுள் அநுராதா. இன்னும் அவளுடைய உள்ளத்தில் ராம்பிரகாஷின் நினைவு தான் குடிகொண்டிருக்கிறது என்பது அவளுடைய வார்த்தைகளினின்று விளங்கியது. சாந்தினிக்குக்கூட அநுராதாவை மன்னியாக அடைவதில் எவ்வளவோ சந்தோஷம் தான். ஆனல் மனித இச்சைப் பிரகாரம் நடந்து விட்டால் உலகம் ஏது?

"அநுராதா! எனக்கு அதிர்ஷ்டம் அவ்வளவு தான். அவனை மறந்து விடு. உன் கணவனுடன் சந்தோஷமாய் வாழ்க்கை நடத்து. நான் தான் நடுக்காட்டில் விடப்பட்டவள் போல் ஆனேன். அப்பா இறந்து ஒரு வருஷத்திற்கெல்லாம் அண்ணு ஓடி விட்டான். அவன் ஓடி நான்கு மாதங்களுக்கெல்லாம் என் உயிர் போலிருந்த நீயும் போகிருய். இதனுல் எனக்கு ஒரு வேளை சித்தப் பிரமை பிடித்து விடுமோ என்னவோ?"

"சீ! அசடே! அப்படியெல்லாம் ஒன்றும் ஆகாது. நான் போய் விட்டால் என்ன? ஜீவன் அண்ணு இருக்கிருர். சதா சர்வ காலமும் தன் கதைகளினுல் மகிழ்விக்கும் நிர்மல் பாபு இருக்கிருர். நீ அவருடைய கதைகளைப் புகழ்ந்து கொண்டேயிருக்கலாம். உன்னை எதிர்த்துப் பேசுவதற்கு ஒருவரும் கிடையாது. ராம் பிரகாஷ்பாபு சீக்கிரம் வந்து விடுவார் என்று என் மனம் சொல்கிறது. நான் தான் உங்களை எல்லாம் விட்டு ஏகாங்கியாகப் போகிறேன்" என்று கூறி என்னைப் பார்த்தாள்.

"அநுராதா! சௌக்கியமாய் போய் வா அம்மா. உன் மனதில் நான் சொன்னவைகளெல்லாம் ஞாபகம் இருக்குமென்று நினைக்கிறேன். உன் மனதில் இரண்டு விதமான சிந்தனைகளுக்கு மட்டும் இடம் கொடுத்து விடாதே. ஒன்று புருஷனுக்குத் துரோகம் நினைத்தல் மற்ருென்று தேசத்திற்கு துரோகம் நினைத்தல் இவ்விரண்டும் தான் நான் சொல்லக் கூடியது" என்றேன்.

"உங்கள் புத்திமதிகள் என்றும் நினைவிருக்கும் நிர்மல் பாபு. நீங்கள் தான் சாந்தினியின் பிற்கால வாழ்க்கையின்

அஸ்திவாரக்கல்லை நாட்ட வேண்டும். ஜீவன் பாபுவுக்கு உலகம் அவ்வளவாகத் தெரியாது. நீங்கள் இக்குடும்பத்தில் ஒரு மனிதர் போல் ஆகிவிட்டீர்கள். அதனுல் தான் என் சாந்தினியை உங்களைப் பார்த்துக் கொள்ளச் சொல்கிறேன். உங்கள் புஸ்தகங்களை அனுப்புங்கள் அதைப்படித்தாவது என் மனம் சற்று நிம்மதியடையட்டும்'' என்ருள்.

நான் தலையை அசைத்தேன். அவள் எல்லோரிடமும் விடைபெற்றுக்கொண்டு கிளம்பினுள். கடைசியாக சாந்தினியை ஆலிங்கனம் செய்துகொண்டு கண்ணீர் விட்டாள். அந்த சமயத்தில் சாந்தினிக்கு எங்கிருந்தோ தேசத்தின் ஞாபகம் வந்துவிட்டது. "அநு! நீ உன் காதலைத் தியாகம் செய்தது கூடப் பெரிதல்ல. அடிமை வலையில் அவதிப்பட்டுக்கொண்டிருக்கிறது தாய்நாடு என்று ஞாபகத்தில் இருக்கட்டும். நீ அதற்காகச் செய்யும் தியாகம்தான் பெரிது'' என்று வீராவேசத்துடன் கூறினுள். பண்டை ராஜபுத்திர வீரமணிகளின் மனதை சாந்தினி கொண்டிருக்கிருள் என்பது என அபிப்ராயம்.

''ஆகட்டும் சாந்தி'' என்று கூறிக்கொண்டே எங்களைப் பிரிந்து சென்ருள் அநுராதா.

* * * * *

அநுராதா பிரிந்து சென்றதிலிருந்து சாந்தினிக்குப் படிப்பிலேயே இஷ்டமில்லை. சதா அண்ணனையும், அனுராதாவையும் நினைத்தவண்ணம் இருப்பாள். நான் போனுல் அரசியல் விஷயங்களைப்பற்றி வாக்குவாதம் செய்யத் தொடங்கிவிடுவாள். இல்லாவிட்டால் என் கதைகளையும் புஸ்தகங்களையும்பற்றி ஏதாவது சொல்லிக்கொண்டிருப்பாள்.

ஒரு நாள் திடீரென்று "நிர்மல் பாபு! இன்று காலேஜில் 'மீட்டிங்''' என்ருள்.

"அடிக்கடி நடப்பது தானே இதில் என்ன விசேஷமிருக்கிறது சொல்வதற்கு?'; என்றேன்.

"விசேஷமிருக்கிறது. நான் காலேஜில் எவ்வளவோ மீட்டிங்கில் பேசியிருந்தாலும் அரசியலைப்பற்றிப் பேசியது கிடையாது. அதைப்பற்றிப் பேச வேண்டுமென்ற எண்ணம் வெகு நாளாக எனக்கு உண்டு. அதை அந்த உபாத்தியாயர்கள் அநுமதிக்கவில்லை. இப்பொழுது என்னமோ அநுமதித்திருக்கிருர்கள். 'அரசியலும் மாணவர்களும்' என்னும் விஷயத்தைப்பற்றிப் பேசப் போகிறேன். எனது வெகுநாளைய எண்ணம் பூர்த்தியாகப் போகிறது. அதுதான் விசேஷம், சொன்னேன்''

"சந்தோஷம். ஆனுல் பேசுவதைக் கவனித்துப் பேசு. காலம் இருக்கிற நிலைமையில் ஏதாவது கூறிவிட்டு மாட்டிக்கொண்டு விழிக்காதே. மாணவர்களைப் பொருத்தமட்டில் எவ்விதம் இருக்க வேண்டுமோ அவ்விதம் பேசு. வீண்விவகாரங்களை இழுத்துப் போட்டுக்கொண்டு குட்டை குழப்பாதே!'' என்றேன். சாந்தினி பேசுவதற்கு நான் ஒன்றும் சொல்லத் தேவையில்லைதான். இருந்தபோதிலும் அரசியலைப் பற்றி பேசும் விஷயமாதலால் அவள் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் வேகம் அவளை அறியாமல் வார்த்தைகளை வெளிவரச் செய்துவிடும். இதனுல் கஷ்டங்கள் ஏற்படலாமென்றுதான் கூறினேன்.

அவள் நான் கூறியதை லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே "நிர்மல்பாபு! ஏன் இப்படி நடுங்குகிறீர்கள்? நான் பேசத்தானே போகிறேன்'' என்று கூறினுள்.

அன்று மீட்டிங்கில் என்றுமில்லாத கூட்டம். காலம் முன்னைப்போல் இல்லை. ஒவ்வொருவர் உள்ளத்திலும் இப்பொழுது சுதந்திர வேட்கை உட்புகுந்துவிட்டது. அதனால் அன்றைய விஷயம் எல்லோரையும் கவர்ந்துவிட்டது. கூட்டமும் அதிகமாயிற்று.

அதிகக் கூட்டம் வந்தால் சாந்தினிக்கு எப்பொழுதும் உற்சாகம் கரைகடந்துபோய் விடும். அவள் பேச்சும் சண்டமாருதம் போல் இருக்கும். ஒவ்வொருவர் மனமும் அவள் உச்சரிக்கும் திர்க்கமான மொழிகளை ஆராய ஆரம்பித்து விடும். நடு நடுவில் ஹாஸ்யமான சொற்களைக் கேட்டு அவ்வளவு பேரும் கொல்லென்று சிரித்து விடுவார்கள்.

அன்றும் வழக்கம்போல் பேச்சும் ஸ்வாரஸ்யமாகத்தான் போய்க்கொண்டிருந்தது. நாழிகை ஆக ஆக சாந்தினி ஆவேசம் வந்தவள் போல் பேச ஆரம்பித்து விட்டாள். விஷயம் உள்நாட்டு விவகாரங்களில் திரும்பி விட்டது. மாணவர்களைப் பற்றிய விஷயம் அடியோடு மறைந்து விட்டது. சரி நான் நினைத்தபடி ஏதாவது வரத்தான் போகிறது என்று நினைத்தேன். திடீரென்று இடி முழக்கம்போல் கைகள் தட்டப்பட்டன. அக்கிராசனர் மூஞ்சியில் எள்ளும் கொள்ளும் வெடித்தன! காரணம் சாந்தினியின் பேச்சு அளவுக்கு மிஞ்சிப் போனதுதான். அவர் எழுந்தார். "நாம் எடுத்துக்கொண்ட விஷயம் மாணவர்களும் அரசியலும் என்பதுபற்றிதான். ஆனால் ஸ்ரீமதி சாந்தினி தேவி பேசிய விஷயங்கள் அதற்கு முரண்பாடாக இருக்கிறபடியால் நாம் அவருடைய பேச்சை இத்துடன் நிறுத்திக் கொள்ளச் சொல்கிறோம்" என்று கூறி முடித்தார்.

சாந்தினிக்கு அவமானம் தாங்க முடியவில்லை. இவ்வளவு நாட்கள் அவள் பேசியவற்றை யாரும் குறை கூறவோ நடுவில் நிறுத்தியதோ கிடையாது. இன்று அக்கிராசனர் அப்படிக் கூறவே அவளுக்கு மிகுந்த அவமானமாகப் போய்விட்டது. அவள் தான் பேசியது தவறு என்று ஒப்புக்கொள்ளவில்லை. ஒவ்வொருவர் தேசத்திற்காக மகத்தான தியாகங்கள் செய்கிறார்கள். தான் தேசத்தைப் பற்றி ஒரு மீட்டிங்கில் பேசியதை குற்றம் என்று கூறினால் ஒப்புக்கொள்ளத் தாயாரில்லை என்று கூறிவிட்டாள்.

சாந்தினியை நடுவில் போகச் சொன்னது மாணவர்களுக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணியது. அவளை மறுபடியும் பேசும்படி செய்ய வேண்டுமென்று அவர்கள் ஆரவாரம் செய்தனர். ஆனால் பலனில்லை. அன்று மீட்டிங் அத்துடன் முடிந்து விட்டது. சாந்தினி 'இனி மேல் நான் பள்ளிக்கூடத்தில் ஒன்றும் பேசுவதில்லை' என்று சங்கல்பம் செய்து கொண்டாள்.

அவள் மறுபடியும் காலேஜிற்குப் போயிருந்தால் அந்த சங்கல்பம் நிறைவேறியிருக்காது. அன்றுடன் காலேஜ் பரீக்ஷை முடிந்துவிட்ட படியால் அவள் காலேஜிற்குப் போகவில்லை. அவள்

மேலும் படிக்க விரும்பவில்லை. அவள் மனதிற்கேற்றுப்போல் ஜீவன் பாபுவும், அவள் தாயாரும் "எதற்குச் சாந்தினி படிப்பு, இத்துடன் நிறுத்தி விடேன்" என்று கூறி விட்டார்கள். அது சாதகமாகவே போயிற்று.

சில நாட்களில் என் 'வஸந்த மாளிகை' புஸ்தகம் வெளியாயிற்று. வழக்கம்போல் சாந்தினியிடம் கொண்டு போய்க் கொடுத்தேன். அநுராதாவிற்கும் ஒரு புஸ்தகம் அனுப்பி வைத்தேன். இந்தத் தடவை சாந்தினி புஸ்தகத்தைப் படித்து விட்டு ஒன்றும் கூருமல் இருந்தது ஆச்சரியமாய் இருந்தது. ஒரு வேளை புஸ்தகம் மிகவும் மோசமாய் இருக்கிறதோ! 'அதை வெளியிட மனமில்லாதவளாய் இருக்கிருளோ என்று நினைத்தேன்.

"சாந்தி! புஸ்தகம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டேன்.

"அநுராதாவிற்குப் புஸ்தகம் அனுப்பியிருக்கிறீர்களல்லவா!" என்றுள்.

"ஆம்."

"அவளிடமிருந்து கடிதம் வரும், அதைக் காண்பிக்கிறேன். அவள் என்ன எழுதியிருக்கிருளோ அதைத் தான் நானும் சொல்லப் போகிறேன்."

"ஏன், உங்கள் இருவர் அபிப்ராயமும் மாறுபட்டல்லவா இருக்கும்?"

"வஸந்த மாளிகை விஷயத்தில் ஒன்ருக இருக்குமென்று எனது பரிபூரண நம்பிக்கை" என்றுள்.

அதற்குமேல் அவளிடம் ஒன்றும் நான் கேட்கவில்லை. அநுராதாவின் கடிதத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நான்கு தினங்கள் கழித்து கடிதம் ஒன்று சாந்தினிக்கு அநுராதாவிடமிருந்து வந்தது.

(தொடரும்.)

பாரதி புதுவைநிகழ்ச்சி

# குயில் அல்லது பகற்கனவு

★

## ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

ஐயனே! என துயிரே! என்னைப் பிரியுமுன்பு தயவு செய்து இதைக் கேட்டருள்வீர். எனது கதை விசித்திரமானது. பொதியமலைப் பிரதேசத்தில் நான் ஒரு மாங்கிளையிலுட்கார்ந்து ஏதோ யோசித்த வண்ணம் இருந்தேன். அங்கு ஒரு முனிவர் வந்தார் முனிவரின் பாதத்தில் விழுந்து வணங்கினேன். பெரியார் என்னை வாழ்த்தி விட்டு வீற்றிருந்தார். என் மனதில் பெரியதொரு சந்தேகம் வெகு நாளாக வாட்டி வதைத்துக் கொண்டிருந்தது. நான் முனிவரிடம் அதைக் கேட்டுத் தெளிய எண்ணினேன்.

'வேத முனிவரே!
மேதினியிற் கீழ்ப்பறவைச்
சாதியிலே நான் பிறந்தேன்
சாதிக் குயில்களைப் போல்
இல்லாமல் என்றன்
இயற்கை பிரிவாகி
எல்லார் மொழியும்
எனக்கு விளங்குவதேன்?
மானுடர் போற் சித்தநிலை
வாய்ந்திருக்கு—செய்தி
[யேன்?''

தபோ முனியே! எனது சந்தேஹத்தைத் தீர்க்க வேண்டும். (நான் இந்த மாதிரி) எல்லா பாஷைகளும் எனக்கு விளங்கக் காரணம் என்ன? என்று எத்தனை சிந்தித்தாலும் விளங்கவில்லை. என் சாதிக் குயில்களைக் கண்டால் அவைகளுடன் சரிசமமாகப் பழக எனக்கு மனம் பிடிப்பதில்லை. "நாம் வேறு சாதி" "தனிப்பிறவி" என்று என் மனதில் ஓர் கர்வம் உண்டாகிறதே! இப்படி ஒரு எண்ணம் மனதிலிருப்பதால் எப்போது மனம் அமைதியின்றித் தவிக்கிறது.

நமக்கு ஏன் இவ்விதம் ஒருவரிடமும் பற்றுதல் இல்லாமல் போய் விட்டது என்று மனம் தவிக்கிறது. தனிமை ஓரளவிற்கு சுகம் அளிக்கும்—எப்போதும் தனிமை என் உயிரைத் தின்கிறது. தகுந்த சக பார்டியில்லாமல் தவிக்கிறேன். என்ன செய்வேன்! காரணம் விளங்கவில்லை. திரிகால முணர்ந்தவரே! என்னை அறிவுறுத்தி ஆறுதல் அளிக்க வேண்டும் ஐயனே!'' என்று பிரார்த்தித்தேன்.

''கூறுகிறார் ஐயர்:—
குயிலே கேள் முற்பிறப்பில்
வீறுடைய வெந்தொழிலாளர்
வேடர் குலத் தலைவன்
வீர முருகனெனும்
வேடன் மகளாக
சேர வளநாட்டில்
தென்புறத்தே ஓர் மலையில்
வந்து பிறந்து
வளர்ந்தாய் நீ
முந்து மழகினிலே
மூன்று தமிழ் நாட்டில்
யாரு நினைக்கோர்
இணையில்லையென்றிடவே
சீருய நின்ருய்;
...............''

குயிலே! உன் கதை வேடிக்கையானது. நீ ஒரு வேட அரசனுக்குப் பெண்ணுகப் பிறந்தாய். உனக்கு கடவுள் அற்புதமான அழகைக் கொடுத்தார். உன்னழகிற் கிணையாக அக்காலத்தில் ஒரு பெண்ணும் இல்லை. சாதாரணமான அழகுடைய பெண்ணுயிருந்தாலுமே எத்தனையோ வாலிபர்கள் அவளையடைய எண்ணுவார்கள். உன்னைப்போல் தெய்வீக அழகு கொண்டவர்களுக்குக் கேட்கவா வேண்டும்?

''மாமன் மகனொருவன்
மாடனெனும் பேர்
கொண்டான்
காமன் கணைக்கிரையாய்,
நின்னழகைக் கண்டுருகி
நின்னை மணக்க நெடு நாள்
விரும்பியவன்
பொன்னை மலரைப் புதுத்
தேனைக் கொண்டுனக்கு
நித்தங் கொடுத்து
நினைவெல்லா நீயாகச்
சித்தம் வருந்துகையில்,
தேமொழியே நீயவனை
மாலையிட வாக்களித்தாய்,
மையலினுலில்லை. அவள்
சால வருந்தல் சகிக்காமல்
சொல்லி விட்டாய்,''

உன் மாமன் மகன் "மாடன்" என்னும் பெயர் உடையவன் நினதழகைக் கண்டுமையலுற்று உனக்குப் பிரியமான தேன், பூ, இவைகளைக் கொண்டு கொடுத்து தனது காதலை உன்னிடம் வெளிப்படுத்தினுள். நீ ஸ்திரீகளுக்கியற்கையான கருணையினுல் "மாமன் மகனுக்கு மாலையிட வாக்களித்தாய், உன் கன்னியுள்ளத்தில் காதல் என்னும் செடி முளைக்கவேயில்லை. ஏதோ வேடிக்கையென்று கருதியிருந்தாய். மாடனது மனம் வருத்தமடையக் கூடாதென்னும் ஒரே காரணத்திற்காக இந்த விதம் செய்தாய். உங்கள் சமாசாரம் இப்படியிருக்க.

''ஆயிடையே நின்றன்
அழகின் பெருங் கீர்த்தி
தேயமெங்குந் தான் பரவ
தேன் மலையின் சார்
பினிலோர்
வேடர்கோன், செல்வமுநல்
வீரமுமே தானுடையான்,
நாடனைத்து மஞ்சி
நடுங்குஞ் செயலுடையான்
மொட்டைப் புலியனுந்தன்
மூத்த மகனுன
நெட்டைக் குரங்கனுக்கு
நேரான பெண் வேண்டி

நின்னை மணம் புரிய
நிச்சயித்து நின்னப்பன்
தன்னை யணுகி "நின்றேர்
தையலையென் பிள்ளைக்குக்
கன்னலஞ் செய்யும்
கருத்துடையேன்"
என்றிடலும்
எண்ணுப் பெருமகிழ்ச்சி
எய்தியே நின் தந்தை
ஆங்கேயுடம்பட்டான்
ஆறிரண்டு நாட்களிலே
பாங்கா மணம்புரியத்
தாமுறுதி பண்ணிவிட்டார்."

பெண்ணே! நின் தகப்பன் நினக்கு விவாகம் செய்யக் கருதியிருக்கும் சமயம் தேன் மலையிலுள்ள வேட அரசன் "புலியன்" என்பான் தன் மகன் "நெட்டைக் குரங்கன்" என்பானுக்கு உன்னை மணம் புரிவிக்க எண்ணினன். இந்த விஷயத்தை உன் தகப்பனுக்கு அறிவித்தான். அதுகேட்டு உன் தந்தை உடனே அதற்குச் சம்மதித்து அடுத்த பன்னிரண்டாவது நாளில் முகூர்த்தமும் நிச்சயித்துவிட்டு மொட்டைப் புலியன் ஊர் சென்றன்.

"பன்னிரண்டு நாட்களிலே
பாவையுனைத்தேன் மலையில்
அன்னியன் கொண்டே
கிடுவான் என்னும் அது
கேட்டு
மாடன் மனம் புகைந்து
மற்றைநாள் உன்னை வந்து
நாடிச் சினத்துடனே
நானுமொழி கூற
நீயுமவனிடத்தே
நீண்ட கருணையினல்
"காயும் சினம் தவிர்ப்பாய்,
மாடா. கடுமையினல்
நெட்டைக் குரங்கனுக்குப்
பெண்டாக நேர்ந்தாலும்,
கட்டுப்படியவர்தங்
காவலிற்போய் வாழ்ந்தா
மாதமொரு மூன்றில் [லும்
மருமம் சில செய்து
பேதம் விளைத்து
பின்னிங்கே வந்திடுவேன்
தாலிதனை மீட்டுமவர்
தங்களிடமே கொடுத்து
நாலிரண்டு மாதத்தே
நாயகனு நின்றனையே
பெற்றிடுவேன் நின்னிடத்தே
பேச்சுத் தவறுவனே? -
மற்றிதனை நம்பிடுவாய்
மாடப்பா" என்றுரைத்தாய்
காதலினல் இல்லை.
கருணையினலிஃதுரைத்தாய்"

குயிலே! போன ஜன்மத்திலும் நீ அருமையான சாரீரம் படைத்திருந்தபடியால் 'குயிலி' என்றே நினக்குப் பெயர் அமைந்திருந்தது. நிச்சயம் செய்து புலியன் ஊர்சென்ற சிலநாட்களுக்கெல்லாம் நீ தோழிகளுடன் காட்டினிடையே விளையாடச் சென்றிருந்தாய். ஓர் இளைஞன் சேர நாட்டு அரசன் மகன் தன் தோழரைப் பிரிந்து ஒருமானைத் துரத்திக்கொண்டு வரும்போது உன்னைக் கண்டான்.

மாலை நேரம் இயற்கையின் மனோகரமான வேளை இளங்குமரி, உனது அழகு அவனை மயங்கச்செய்தது. அவன் மனம் நெகிழ்ச்சியடைந்தது. உன்னைக் காதலித்தான், முதற் பார்வையிலேயே உனதுள்ளமும் அவனுக்கு அடிமையாகிவிட்டது. ஒரே பார்வையிலே உயிர் கலந்துவிட்டது. இது கண்டு உன்னுடன் நின்ற தோழியரும்விலகிசென்றூர்கள்.

பெண் குயிலே!
நின்னெத்த தோழியரு
நீயுமொரு மாலையிலே
மின்னர் கொடிகள்
விளையாடுதல்போலே
காட்டினிடையே
களித்தாடி நிற்கையிலே
வேட்டைக்கென வந்தான்
வெல் வேந்தன் சேரமான்
தன்னருமை மைந்தன்
தனியே துணைபிரிந்து
மன்னவன்றன் மைந்தனெரு
மானைத் தொடர்ந்துவர
தோழியரு நீயுந் தொகுத்து
நின்றே யாடுவதை
வாழியவன் கண்டுவிட்டான்
மையல் கரைகடந்து
நின்னைத் தனதாக்க
நிச்சயித்தான் மாது நீ
மன்னவனைக் கண்டவுடன்
மாமோகங் கொண்டுவிட்
டாய்
நின்னையவன் நோக்கினன்.
நீயவனை நோக்கினய்
அன்னதொரு நோக்கினிலே
ஆவி கலந்து விட்டீர்!



இங்கிலாந்திலும், வேல்ஸிலும் நாஸிகளது குண்டு வீச்சால் 2,750,000 வீடுகள் நாசமாயின. இவற்றில் 2,500,000 வீடுகள் செப்பனிடப்பட்டு சரியாக்கப்பட்டு விட்டன. அநேகம் இடங்களில் ஷ வீடுகள் குண்டு வீச்சுக்கே இலக்காகவில்லையென்று எண்ணும்படி திறமையாக ரிப்பேர் செய்யப்பட்டனவாம். படத்தில் குண்டு வீச்சுக்காளான ஒரு கட்டிடத்தைக் காணலாம்.

## நவநாகரீகம்

★

# ஒரு புடவை

(காசினி எழுதியது)

★

* * * 'நான் இரண்டு டாகா மஸ்லின் புடவைகள் வாங்கி இருக்கிறேன்!' என்று மாலினி சொன்னாள்.

'மஸ்லின் புடவையா? ரொம்பவும் மெல்லியதாக இருக்காதோ எப்படிக் கட்ட முடியும்?' என்று பங்கஜத்தின் மாமியார் கேட்டாள்.

'மெல்லிய புடவை, கட்ட முடியாது என்றெல்லாம் இந்தக் காலத்திலே கிடையாது. உள்பாவாடை, சட்டை என்று முதலிலேயே பல உடைகள் போட்டுக்கொள்ளுகிறார்களே! அப்புறம் இவர்களால் கொசு வலை மாதிரித் துணியையும் சௌகரியமாகக் கட்ட முடியாது! பேச்சுக்கு மட்டும், நாங்கள் சிக்கனமாக ஆறு கஜம் புடவை உடுத்துகிறோம் நீங்கள் ஒன்பது கஜத்தைத் தூக்கிச் சுமக்கிறீர்கள் என்று சொல்லுகிறார்கள்!' என்றாள் என் அத்தை.

'ஆமாம்! நீங்கள் சொல்வது வாஸ்தவம் தான். சட்டை, உள் சட்டை, வெஸ்ட்டு, பாவாடை என்று பார்க்கப்போனால் ஒன்பதுக்கு பதில் இவர்களுக்குப் பன்னிரண்டு கஜம் துணிக்கு மேல் வேண்டி இருக்கிறது!' என்றாள் லேடி சுந்திராசாரி.

'அது கிடக்கட்டும்! இந்த மஸ்லின் புடவைகள் எப்படி இருக்கும்?' என்று பங்கஜத்தின் மாமியார் விடாமல் கேட்டாள்.

'அப்படி ஒன்றும் மெல்லியதாக இருக்காது. ஒரு புடவை முப்பத்தைந்து ரூபாய் என்று வாங்கினேன். லேசான பச்சை வர்ணம். இதில் சரிகைப் பூக்கள் போட்டிருந்தது. மற்றொன்று கறுப்பு. நாற்பது ரூபாய் விலை. இதில் தூக்கின மாதிரியில் கறுப்பிலும், சரிகையிலுமாக பூக்கள் போட்டிருந்தன!' என்றாள் மாலினி.

'ஆமாம்; இந்தப் புடவைகள் பார்க்க ரொம்பவும் அழகாகத்தான் இருக்கிறது. ஆனால், துவைத்துக் கட்ட சுகப்படுகிறதில்லை; எனக்குத் திருவனந்தபுரம் புடவைகள் தான் இவற்றிற்குசௌகரியம் என்று தோன்றுகிறது!' என்றாள் கமலி.

'புடவையை வாங்கி உடனே தண்ணீரில் போடுவானேன். மேலும், இதுவும் அப்படி ஒன்னும் அல்காவாக இல்லை. தோய்க்கலாமே?' என்றாள் மாலினி.

புடவைகள் என்றால் பல தினுசாகத்தான் இருக்கும். இதெல்லாம் அவரவர்கள் வைத்துக்கொள்ளும் நேர்த்தியிலே தான் இருக்கிறது! தினப்படி துவைத்துக் கட்டக் கூடிய புடவைகள் மட்டுமே வாங்க முடியுமா என்ன?' என்றாள் லேடி சுந்திராசாரி.

'இந்த டாகா மஸ்லின் புடவைகள் வாங்கின கடையிலே ஒரு பட்டுப் புடவை பார்த்தேன்! எவ்வளவு நன்றாக இருந்தது தெரியுமோ?' என்று கூறி, மாலினி பெருமூச்சு விட்டாள்.

'ஓஹோ! விலையும் மிகவும் நன்றாக இருந்தது என்று சொல்லு! எப்படிப்பட்ட புடவை?' என்றாள் பங்கஜத்தின் மாமியார்.

'ஒரு வித ஆழ்ந்த சிவப்புக் கலந்த அஞ்சுருவிப் புடவை. அதாவது தங்க மேக வர்ணம் என்பதற்கு பதில் சிகப்பு மேக வர்ணம் என்று கூறலாம். இதற்கு சுமார் ஜாண் அகலத்திற்கு சரிகைக் கரை போட்டிருந்தது. சரிகைக் கரைக்கு மேல், சரிகையிலேயே மாங்காய்கள் போட்டிருந்தன. மூன்று சரிகைப் பட்டிகள் தலைப்புக்குப் போட்டிருந்தன. விலை நூற்றி எழுபத்தி ஐந்து ரூபாய் என்று சொன்னான். புடவையின் அழகுக்கு இரு நூறு ரூபாய்கள் என்று சொன்னால்கூடக்கொடுக்கலாம் என்று தான் தோன்றிற்று!' என்றாள் மாலினி.

'தோன்றுதோ ஒரு பக்கம் உண்ணச் சோறில்லாமல், ஜனங்கள் உண்மையிலேயே உயிரை விடுகிறார்கள். நீங்கள் புடவை, நகை என்று பெருமூச்சுவிடுகிறீர்கள்! நினைத்தால் அகங்காரமும், துக்கமும் வருகிறதே ஒழிய, செய்வகை எதுவும் தெரியவும் இல்லை!' என்று லேடி சின்னையாவின் மகள் திடீரென்று சொன்னாள். இதிலிருந்து பேச்சு, இப்போது கல்கத்தாவில் ஏற்பட்டிருக்கும் சோற்றுப் பஞ்சம் கண்றாவிக்கு மாறியது. மாலினி சொன்ன புடவையை நானும்பார்த்தேன். வாஸ்தவமாக அவள் சொன்ன மாதிரியில் மிகவும் அழகான புடவைதான்.

* * * *

## சாம்பார் சாதம்

பச்சைப் பட்டாணியை வாங்கி, உறித்து, கொஞ்ச நேரம் தண்ணீரில் போட்டு, மேலே மிதக்கும் சொத்தை விதைகளை எடுத்து விட்டு, அலம்பி வைத்துக்கொள்ள வேண்டும். உறித்த பட்டாணி கால்படி இருந்தால், மூன்று ஆழாக்கு அரிசியும், ஒரு ஆழாக்குப் பருப்பும் வேண்டும். அரிசியைக் குருணையே இல்லாமல் நன்றாகத் தெரிந்தெடுத்து, இரண்டு முட்டை நெய் விட்டு, அதிகம் வறுக்காமல், நன்றாகச் சூடு பிடிக்கும் வரையில் வறுத்துக் கொள்ளவேண்டும். பருப்பு, பட்டாணி இவைகளை வேறாக

—அடுத்த பக்கம்

சிறுவர் பகுதி

# பால்கன்-ஜீ-பாரீ

★

[அகில பாரத பாலர் சங்கத்தின் ஆதரவில் நடத்தப்படுவது]

அன்பார்ந்த சகோதர சகோதரிகளே !

போனவாரம் கொடுத்த கணக்குக்கு விடை கீழே கொடுக்கிறேன்.

"நடுவிலிருக்கும் எண் 8. கண்டு பிடிக்கும் விதம்:—மேலிருந்து கீழ்க் கூட்டினால் வரும் தொகையையும், இடமிருந்து வலம் கூட்டினால் வரும் தொகையையும் கூட்டி, சுற்றி வரக் கூட்டினால் வரும் தொகையைக் கழித்து, மீதியை 2-ஆல் வகுத்தால் நடுவிலிருக்கும் எண் கிடைத்து விடும்."

21 + 20 = 41; 41—25 = 16

2)16( = 8 (விடை)

[சகோதரி உஷா, 13வயது, ஸிம்லா,]

* * * *

சகோதரி ஆர். ஸீதா (11 வயது, ஸிம்லா) உங்கள் நண்பர்களுடன் விளையாடுவதற்கு ஒரு வழி சொல்லுகிறாள்:—

முதலாவது நாம் ஏதாவது எண் எழுதிக் கொள்ள வேண்டும். ஆனால் முதல் ஸ்தானத்தில் 9 தான் இருக்க வேண்டும். பிறகு நாம் யாருடன் விளையாடுகிறோமோ அவனைப் பார்த்து, உனக்கு எத்தனை வரியில் கணக்குப் போட வேண்டும்?" என்று கேட்க வேண்டும். அவன், "5 வரிகளில்" என்றால், நாம் 9-இலிருந்து 2-ஐக் கழித்து எழுதிக் கொள்ள வேண்டும். பிறகு மற்ற இலக்கங்களை அப்படியே போட வேண்டும். கடைசியில் 9-லிருந்து கழித்த எண்ணாகிய 2-ஐப் போட வேண்டும். இவ்விதமாக நாம் விடையை எழுதிய பின், நண்பனை ஏதாவது எண்ணை எழுதச் சொல்ல வேண்டும். அவன் எழுதிய பின் நாம், அவ்வெண்ணிலுள்ள ஒவ்வொரு இலக்கத்தையும் 9-லிருந்து கழித்து மீதியைப் போட வேண்டும். திரும்பவும் அவனை ஏதாவது எண்ணை எழுதச் சொல்லி, முன் செய்தது போலச் செய்ய வேண்டும். இப்படி 5 வரிகளாகும் வரை எண்களைப் போட வேண்டும். பிறகு கூட்டினால் வரும் விடை நாம் கொடுத்த விடையாகவே இருக்கும்.

உதாரணம்:—

```
 559
 238
 ———
 761
 450
 ———
 549
 ————
2557
```

கோடிட்ட எண்கள் நண்பன் கொடுப்பவை.

குறிப்பு:—நாம் நண்பனைப் பார்த்து ஒரு விஷயம் சொல்ல வேண்டும். என்னவென்றால் அவன் எழுதும் எண் 9-லிருந்து ஆரமபிக்கக் கூடாது. நாமும் ஒரு விஷயம் கவனிக்க வேண்டும். கழிக்கும் போது மனதுக்குள் கழிக்க வேண்டும். அப்பொழுது தான் குட்டு வெளிப்படாது!

7 வரிகளில் விடை வேண்டுமானால் 3-ஐயும் 9-வரிகளிலானால் 4-ஐயும், 2-க்குப் பதிலாக கழிக்க வேண்டும்.

* * * *

## நவநாகரீகம்

(முன் பக்கத் தொடர்ச்சி)

வேக வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும். ஒரு கனமான ஈயம் பூசின பாத்திரத்தில் வெந்த பருப்பைக் கொட்டி, திட்டமாக ஜலம் போட்டு, இதில் அரிசியைக் களைந்து போட்டு, பாதி வெந்ததும், வேண்டிய அளவு கரைத்த புளி, உப்பு, ஒரு சிறிய துண்டு பெருங்காயம், வெந்த பட்டாணி இவைகளைப் போட்டு, கொதிக்க விடவேண்டும். வேண்டுமானால் கொஞ்சம் தண்ணீர் விட்டு, அடிப்பிடிக்காமல் கிளற வேண்டும். சாதம் மெதுவானதும், காரம் வேண்டிய அளவுக்கு மிளகாய் வற்றல், கொஞ்சம் தனியா. கொஞ்சம் கடலைப் பருப்பு இவற்றை வறுத்து இடித்து இதில் கொட்ட வேண்டும், சுமார் மூன்று பலம் நெய் வரையில் இதில் கொட்டி. கடுகு, பச்சை மிளகாய் தாளித்து, கறிவேப்பிலை போட்டு, நன்ருகக் குழைந்து கைகையாக இருக்கும் போதே இறக்க வேண்டும். ஆற ஆற கெட்டியாகி விடும், இது சாப்பிட ருசியாகவும், நல்ல புஷ்டியான ஆகாரமாகவும் இருக்கும்.

---

கரமனை (திருவனந்தபுரம்) பால்கன்—ஜீ-பாரீயிலிருந்து குழந்தைகள் ஸெப்டம்பர் 5-ந் தேதி ஒரு விநோத யாத்திரை போவார்கள். பட்டணத்திலுள்ள, ம்யூஸியம், அக்வேரியம், ரப்பர் தொழிற்சாலைமுதலிய இடங்களுக்குப் போவார்கள். யாத்திரையில் கலந்து கொள்ள இஷ்டப்படுபவர்கள், காரியதரிசி சகோதரன் ஸீதாராமனைக் கண்டு பேசவும்.

சகோதரன் ஹரி.





## ஸிஸிலி படையெடுப்பு

துருப்புகள், பீரங்கிகள், டாங்கிகள், முதலியன ஸிஸிலி படையெடுப்பின் போது விரைவாகக் கரை சேர்க்கப்படும் காட்சி.





ஸிஸிலியில் கைப்பற்றப்பட்ட நகரத்தில் ஜெனரல் மாண்ட்கோமரி அமெரிக்க வாஹனமொன்றில் சுற்றுப் பிரயாணம் செய்து பார்க்கிறுர்.









ஸிஸிலியில் ராணுவப் போலீஸ்காரன் பிரிட்டிஷ் போக்குவரத்தைக் கவனித்து கட்டுப்படுத்துவதைக் காட்டும் படம்.



Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Po
Press, Mount Road, Madras.—Editor: C. R. Srinivasan, B. A.